

# ஸ்ரீ விலக்ஷணானந்தரின்

# சப்த விதானம்

# ஸ்ரீ விலக்ஷணானந்தரின் சப்த விதானம்

தொகுப்பாசிரியர்
**டாக்டர் திருமதி அனந்தகிருஷ்ணா**

வெளியீடு
**யோக பிரயாகா**
12/16, டானியல் தெரு, ஆதம்பாக்கம்,
சென்னை 600 088. கைப்பேசி : 92821 04459

# முன்னுரை

சப்த விதானம் என்னும் இப்புத்தகம் 7 பிரிவுகளை உள்ளடக்கிய ஒரு அருமையான தொகுப்பு. தேச கால வர்த்தமானத்திற்கு உரிய அரிய தலைப்புகளைக் கொண்டதாகும்.

பாமர ஜனங்களுக்கு மனதில் எழும் உண்மையான சந்தேகங் களுக்கு தகுந்த விடையளிக்கும் விதமாக அமைந்துள்ளது முதல் இரண்டு பிரிவுகள்.

அடுத்து வரும் தற்போதைய இந்தியாவின் பரிதாப நிலை - இந்துமத ஸ்தாபனம் என்ற இரண்டில் பாரம்பரியம் மிகுந்த நமது பாரத நாட்டின் இயற்கை வளங்கள், ஐஸ்வர்யங்கள் மற்றும் வைதீக தர்மங்கள், நியாயங்கள், சாஸ்திரங்கள், ஆசாரங்கள் கடைப்பிடிக்கப்படாததினாலும், மேலை நாட்டு மோஹத்தினாலும், ஆக்கிரமிப்பினாலும் நசிந்து மறைந்து வருகின்ற இன்றைய அவல நிலையை தெள்ளென படம் பிடித்து காண்பித்துள்ளார்.

நம் தேசத்திற்கு ஏற்படப்போகும் அபாயங்களை பல்வேறு கோணங்களிலிருந்து அலசி இருக்கின்றார் ஸ்ரீ ஸ்வாமிகள். குறிப்பாக தெய்வீக செயல்கள், பூஜைகள், யக்ஞங்கள், ஜப தபங்கள் மீது நம்பிக்கை குறைந்தபடக் கூடிய நிலையையும் எடுத்துரைக்கின்றார், தொடர்நத வரும் விஷயங்கள் இக்கால இந்தியாவை நெறிப்படுத்தி இந்துமதத்தை நிலைநாட்டுவதற்கு உரிய உபாயங்களாக ஜாதி, மத பேதமின்றி குறிப்பாக தாழ்ந்தவர்கள் என்று ஒதுக்கி வைக்கப்பட்டவர்களை நம்முடன் இணைத்து, அணைத்து நமது சாஸ்திர சம்பிரதாயங்களை அவர்களுக்கும் போதித்து மதத்தின் மேன்மையை வலுப்படுத்தியிருக்கிறார். இதற்கு சிகரமாக மத போதகர்கள், ஆசார்யர்கள், சன்யாசிகள்,

மடாதிபதிகள் எல்லோரும் இணைந்து இவர்களுடன் இப்பெரும் பணியை செயல்படுத்துவதற்கு வற்புறுத்தியுள்ளார்.

இதன் பின், அந்தர்தியானம் என்னும் தலைப்பில் இந்தியாவில் ஏற்பட்டுள்ள விபரீதமான மாறுதல்களையும், அதற்கான காரணங்களையும் அதன் விளைவுகளையும் அதற்குரிய நிவர்த்தியாகிய பரிகாரத்தையும் அழகாக எடுத்துரைத்திருக்கின்றார்.

கடை இரண்டு பிரிவுகளில் கடவுள் மதம் என்ற தலைப்பில் ஸ்ரீ ஸ்வாமிகள் பட்டியல் இட்டு இருப்பதை அன்பர்கள் மிகுந்த கவனத்தோடு உள்வாங்கி இன்று நம் மதத்தினை பலவீனப் படுத்தும் பல காளான்கள், புல்லுருவிகளை களைந்து கடவுள் மதமாகிய நமது புராதன தர்மத்தினை ப்ரகாசப்படுத்துவோமாக

இந்த புத்தகத்தினை வெளியிட பேருதவி செய்த என் மகள் இந்திரா பாலாஜிக்கு ஸ்வாமியின் கடாக்ஷம் கிடைக்கட்டும்.

**- டாக்டர் திருமதி அனந்தகிருஷ்ணா**

ஓம்
தத் ஸத்

ஸ்ரீ விலக்ஷணானந்த ஸ்வாமிகள்
அருளிச் செய்த

# சமரஸம்

இஃது
அம்பாசமுத்திரம்
**அ. பாடகலிங்க முதலியார்**
அவர்களால்
பதிப்பிக்கப்பட்டது.

**இஃது 1927 மறு பதிப்பு**

## முகவுரை

ஆரிய சகோதரர்களே! அன்பர்களே! ஸ்ரீ விலக்ஷணானந்த ஸ்வாமிகள், பல அன்பர்களுடன் திவ்ய க்ஷேத்திரமாகிய காஞ்சி மாநகருக்கெழுந்தருளினர். அங்குள்ள வீரவைஷ்ணவப் பிரமாணர்கள் ஸ்வாமிகளைத் தெரிசித்து, "நீங்கள் இராமானுஜ வீரவைஷ்ணவப் பிராமண குலத்தில் பிறந்திருந்தும் விசிஷ்டாத்வைத மதஸ்தாபனங்களும் அந்த மதச்சார்பான சன்னியாஸமும் உங்களிடத்திலில்லாமல் சமரஸமாக எல்லா மதங்களும் பகவானை அடையும் மார்க்கந்தானென்று போதித்து, வருகிறீர்களே, இது ஞாயமாகுமா? இதற்குந் தகுந்த சமாதானம் சொல்ல வேண்டும்" என்று கேட்டுக் கொண்டனர் அவ்வாறே ஸ்வாமிகள் இசைந்து தகுந்த சமாதானம் வினா விடை வடிவமாகக் கூறிக் கொண்டு வந்தனர், அதன் லக்ஷியங்கள் இந்த நூலில் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

இப்படிக்கு,
**ஓர் அன்பன்**

ஓம் தத் ஸத்

# ஸ்ரீ விலக்ஷணானந்தர் அருளிச் செய்த

# சமரஸம்

காஞ்சி மாநகர வாச வீர வைஷ்ணவ பிராமணங்களே!

நீங்கள் இப்போது கேட்ட கேள்வியானது என் மனதிற்கு மிகுந்த சந்தோஷத்தை உண்டாக்கியது. ஏனெனில் இந்தக் கேள்வி கேட்டிராவிட்டால் இந்த அருமையான சாஸ்திரம் எழுதியிருக்க முடியாது. அதோடு இப்படி கேள்விகள் பலர் என்னைக் கேட்டாலும் உங்களுக்குச் சொல்லப் போகிற இந்த நூலைக் கொண்டே அவர்களும் தெரிந்து கொள்ளவார்கள். ஆதலால், இன்னும் பலமான கேள்விகள் கேட்க வேண்டும். மனங்கூசுதல்

கூடாது. ஆனால் நான் ஆதியில் வைஷ்ணவ மதப் பிராமண குணத்தில் பிறந்திருந்தேனென்பது வாஸ்தவம். அப்பால் நான் எதற்காக அதையெல்லாம் அடியோடு விட்டுவிட்டு வந்தேனென் பதும் இதுவரை என்னென்ன காரியங்கள் செய்திருக்கிறோ மென்பதும் எனது அந்தரங்க எண்ணங்களும் உங்களுக்குத் தெரிந்திருக்குமானால் இந்தக் கேள்வி இப்போது வந்திருக்கக் காரணமிராதென்றே நினைக்கிறேன். நீங்கள் படித்த ஞானத் தினாலேயோ, யுக்தியினாலேயோ, அபிமானத்தினாலேயோ, சொவத்தினாலோயோ, மற்றெதினாலேயோ, கேட்டிருந்தாலும் அக்கேள்விக்குத் தகுந்தபதில் சொல்ல நான் தயாராயிருக் கிறேன். தாமதிக்காமல் ஒவ்வொரு கேள்விகளாகவே வெகு அமைதியுடன் கேட்க ஆரம்பித்து விடுங்கள்.

## வைஷ்ணவர்கள்

**வினா :** நீங்கள் கிரகஸ்தாஸ்ரமத்திலிருந்து அதானது குடும்பத்திலிருந்து சன்னியாஸியாவதற்குக் காரணமென்ன?

## ஸ்வாமிகள்

**விடை :** நான் கிரகஸ்தாஸ்ரமத்தில் இருக்கவுமில்லை. சன்னியாஸ இச்சையும் எனக்குக் கிடையாது. நான் சன்னியாஸியுமல்ல. ஈஸ்வர அனுக்கிரகத்தினாலும் பிராரத்த கன்ம வசத்தாலும் அந்தரங்க வைராக்கிய அநித்யவுலக நிச்சயித்தினாலும் துறவியானேன்.

**வினா :** அப்படி சந்நியாசியான போது திரிதண்ட தாரண வைஷ்ணவ சன்னியாசி யாகாமல் பொதுவாக இருப்பதற்கு என்ன காரணம்?

**விடை :** ஒரு மதத்தின் வேஷமாக வெளிக்குத் தோற்றுவது எனக்கு சம்மதில்லை. கட்டுப்பாடுடைய எந்த மத

சன்னியாஸமானாலும் எனக்கு வேண்டியதில்லை என்ற நிச்சயத்தாலும் அவ்வித நிபந்தனைக்குட்பட்ட சன்னியாசத்தை நான் அடையாத காரணம்.

**வினா :** இராமானுஜர், வேதாந்த தேசிகர் முதலிய அவதார புருஷர்கள் வைஷ்ணவ மத சன்னியாசிகளாகி இருந்தார்களே அப்படி நீங்கள் இருந்தாலென்ன?

**விடை :** அவர்கள் பிராரத்தம் வேறு, என் பிரார்த்தம் வேறு, அது அவர்கள் அபிப்ராயம், இது என் அபிப்பிராயம். அவர்களைப்போல நான் இருக்க வேண்டுமென்ற பிரமாண மொன்றுமில்லையே.

**வினா :** அவர்கள் உலக ரக்ஷக அவதார புருஷர் களல்லவா?

**விடை :** அல்ல. வைஷ்ணவ மத ரக்ஷக அவதார புருஷர்கள் மட்டுமேயன்றி சர்வ உலக ரக்ஷக அவதாரிகள் அல்ல.

**வினா :** அவர்களைப் பற்றி உங்களது அபிப்பிராய மென்ன?

**விடை :** இராமானுஜர் முதலிய அவதார புருஷர்கள், பூர்ண ஞானிகள், மஹா பரிசுத்தர்கள், வைஷ்ணவ மத ஸ்தாபகர்கள் என்பதைச் சந்தேகமின்றி நான் ஒப்புக் கொள்கிறேன். அவர்களைப்போல நான் வெளி விஷயத்தில் மட்டும் ஒப்புக் கொள்ளவில்லை.

**வினா :** உங்களுக்கு சிகை, யக்ஞோபவீதம் ஏன் இல்லை.

**விடை :** வைஷ்ணவர்களாகிய நீங்கள் யாராவது சன்னியாசி களைக் கண்டால் ரோமத்தையும் நூலையும் பார்க்கும்படி, உங்கள் சாஸ்திரம் சொல்ல வில்லையே?

**வினா :** அதற்கல்ல, தெரிந்து கொள்ளுவதற்காக.

**விடை :** எக்ஞோபவீதத்தில் இரண்டு விதமுண்டு. ஒன்று அந்தரங்கம், மற்றொன்று பகிரங்கம், அப்படியே, சிகையிலும் தண்டத்திலிருமிருக்கின்றன. அவை இரண்டில் அந்தரங்க யக்ஞோபவீதம் சிகை, தண்டம் இவைகள் இல்லாதவர்க்கே பகிரங்க ஸ்தூல சரீர யக்யோஞபவீதம் முதலியவைகள் வேண்டும். ஆனால் இராமானுஜர் முதலிய மஹான்கள் அந்த ரங்க யக்ஞோபவீதம் சிகை தண்டம் இவைகளில் லாதவர்களா? அவர்கள் பகிரங்க சாதனங்களைத் தரித்திருந்தார்களே யென்றால், அவர் தானும் அஞ்ஞானிகளை வசப்படுத்த வேண்டி அப்படிச் செய்தாரே தவிர வேறல்ல.

**வினா :** இராமானுஜரே, அப்படி அஞ்ஞானிகளுக்கு அஞ்ஞானி போல் நடித்துக் காட்டியிருக்க நீங்கள் ஏன் அப்படித் தரித்துக் கொள்ளக் கூடாது?

**விடை :** இராமானுஜர் வைஷ்ணவ மதம் ஒன்றுக்கு மட்டும் ஆசாரியரானபடியால் அவர் வைஷ்ணவர்களுக்கு மட்டும் நடித்துக் காட்ட வேண்டியிருப்பதால் அவர் அப்படியிருக்க வேண்டிதாயிற்று. என்னை எல்லா மதத்தாரும் நம்ப வேண்டி இருப்பதால் ஒரு மதக் கொள்கை, தோற்றம் இவைகளில்லாமலிருக்க வேண்டியிருக்கிறது. உள்ளில் இராமாநுஜர் முதலிய சம்பரதாய மஹான்களுடைய அபிப்பிராயமே எனக்குச் சம்மதம்.

**வினா :** அப்படியிருந்தால் எங்களுக்கு ஒத்து வரவில்லையே?

**விடை :** நீங்கள் சொல்லுகிறபடி நான் இருந்தால் மற்ற எல்லா மதஸ்தர்களுக்கும் ஒத்து வராதே.

**வினா :** நீங்கள் வைஷ்ணவ மதத்தை மட்டும் ஏன் ஸ்தாபிக்கக் கூடாது?

**விடை :** எல்லா மததத்தையும் ஸ்தாபிக்கும் அபிப்பிராயமே தவிர வைஷ்ணத்தை மட்டுமே ஸ்தாபிக்கிற குறுகிய புத்தி என்னிடம் கிடையாது.

**வினா :** இப்படிப் பொதுவாக எல்லா மதங்களையும் ஸ்தாபித்துக் கொண்டு வந்தால் நீங்கள் அனுஷ்டித்து வருகிற மதந்தான் என்ன?

**விடை :** அது தெரியாமல் நீங்கள் என்னிடம் ஏன் பேச வேண்டி வந்தீர்கள்.

**வினா :** எங்களுடைய அபிப்பிராயத்தைக் காட்டிப் பேச வந்தோம்.

**விடை :** ஆனால், நானும் என்னுடைய அபிப்பிராயத்தைக் காட்டிப் பேசி விட்டேன்.

**வினா :** ஆனால் எங்களைப்பற்றி நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்?

**விடை :** எதார்த்தமான வைஷ்ணவ சம்பிரதாயமான விசிஷ்டாத்வைத மார்க்கத்தினின்றும், கொஞ்ச மேனும் நழுவாது பகவானை அடைவதற்கு ஏது வான கைங்கரியங்களைச் செய்துவர வேண்டு மென்று சொல்லுகிறேன்.

**வினா :** இது வரையில் நீங்கள் இருந்ததுபோதும் இனி மேலாவது நீங்கள் இந்த சம்பிரதாயத்திற்கு வரலாமா?

**விடை :** நான் உங்கள் சம்பிராயத்தை அந்தரங்கத்தில் விட்டதாகத் தெரியவில்லையே?

**வினா** : நீங்கள் வைஷ்ணவ மதத்தில் பிறந்தும் இப்படிச் சமரச ஞானியாகி வருவதற்கு உங்களுடைய அறிவு தான் காரணமோ?

**விடை** : பகவானுடைய கிருபையும், விதியின் பயனுமே காரணம்.

**வினா** : இதற்கு ஏதாவது பிரமாணமுண்டோ?

**விடை** : விதியின் வழி மதி செல்லு மென்பதே பிரமாணம்.

**வினா** : இப்படிச் சொல்லும் பிரமாணங்களை நாங்கள் ஒப்புக் கொள்ள மாட்டோம்?

**விடை** : 'அவரவர் விதி வழி அடைய நின்றனரே' என்று நம்மாழ்வார் கூறியிருக்கிறதே பிரமாணம்.

**வினா** : பேச வழியில்லாமற் பேசி விட்டீர்களே? அதற்கென்ன செய்கிறது?

**விடை** : இனியும் கேட்க வேண்டியதைக் கேட்டு விடுகிறது.

**வினா** : வைஷ்ணவ மத அனுஷ்டானம் செய்பவர்களுக்கு மோக்ஷம் உண்டா இல்லையா?

**விடை** : வைஷ்ணவ மதத்தில் உறுதி பெற்ற உங்களுக்கு இப்படி சந்தேகங்கள் வரலாமா.

**வினா** : சந்தேகத்தால் நாங்கள் கேட்கவில்லை. பரிக்ஷைக் காகக் கேட்டோம். பரீக்ஷைக்காகக் கேட்டதனால் நாங்கள் சந்தேகமுடையவர்களல்ல.

**விடை** : என்னைப் பரீக்ஷை செய்ய வந்திருப்பது வாஸ்தவ மானால் எனக்குக் குருவாகவல்லவோ இருக்க வேண்டும்?

**வினா :** அப்படி ஒன்றுமில்லை.

**விடை :** பின்னெதற்காக கேட்டு வந்தீர்கள்? சந்தேகந் தீர்த்து கொண்டு போவதற்கு வந்தவர்களென்றும் சொன்னீர்கள். அப்புறம், பரீக்ஷைக்காக வந்தவர் களென்றுங் கூறினீர்கள். இவற்றையெல்லாம் பார்க்கும்போது ஏமாற்றமாகவல்லவோ தோற்றுகிறது. நீங்கள் எனக்குக் குருவாக இருக்க வேண்டும். அல்லது சிஷ்யனாயிருக்க வேண்டும். அல்லது விருதாவாக வந்து பார்த்து விட்டுப் போகிற மனிதர்களாயிருக்க வேண்டும். குருவாக இருந்தால் எனக்குள்ள சந்தேகங் களையெல்லாம் தீர்த்து வைத்து, உபதேசம் செய்து, என்னைக் கிருதார்த் தனாக்கி விடவேண்டும். அப்படி இல்லையென்றீர்கள். சிஷ்யனாக இருந்தால் நான் சொன்னதை மறுக்காமல் பக்தியுடன் கேட்டுக் கொண்டு அடங்கிப் போக வேண்டும். அதுவுமில்லையென் கிறீர்கள். விருதாவான மனிதர்களாய் வந்தீர்களா வென்றால் ஒப்புக் கொள்ள மாட்டேன் என்கிறீர்கள். பின் எதற்காகக் கேட்க வந்தீர்கள். கொஞ்சம் நாமும் படித்த படிப்பைக் கொண்டு ஸ்வாமிகளிடம் பேசி விடலாமென்ற எண்ணமா? அல்லது ஆழம் பார்த்து விட்டுப் போகலாமென்ற அபிப்பிராயமா? இவற்றில் ஏதானாலும் இன்னும் பலமாய்க் கேளுங்கள்.

**வினா :** ஸ்வாமிகளே! ஸ்வாமிகளே! நாங்கள் அப்படிக் கெட்ட அபிப்பிராயத்தோடு வந்தவர்களல்ல. எங்களுடைய மத அபிமானத்தினாலும், தாங்கள் எங்கள் வைஷ்ணவமதப் பிராமண குலத்தில் அவதரித்தபடி யினாலும் கூறியதே தவிர வேறல்ல.

**விடை :** நீங்கள் இப்படித்தான் நடக்க வேண்டும், இன்னபடி தான் சன்னியாசமாக வேண்டும். இன்ன கொள்கைப்

படிதான் இருக்க வேண்டும் என்று என்னைப்பற்றி என்னிடம் போதிப்பதற்கு உங்களுக்கு அந்தஸ்து இல்லாதபடியால் இனி அவ்வித எண்ணங்களை விட்டொழியுங்கள். எனது பரமாசாரியர் எழுந்தருளிச் சொல்லும்போது நான் கேட்டுக் கொள்கிறேன். நீங்கள் எத்தனை வித்வான்கள் மடாதிபதிகள், வாயாடிகள், ஆசாரியர்கள் இவர்களைக் கொண்டு வந்து என்னெதிரே பேச விட்டாலும் நான் அடங்க மாட்டேன். கண்டவுடன் அடங்கி விடக்கூடிய சக்தி பெற்ற மஹான் வந்தால் தானே அடங்கி அவ்வாறே நடக்கத் தயாராயிருக்கிறேன். நீங்கள் சொல் வதற்குக் கொஞ்சங் கூட அருகரல்ல.

**வினா** : நாங்கள் கேட்டதே பிசகாயல்லவா முடிந்தது.

**விடை** : நீங்கள் இதுவரை கேட்டதைப் பற்றி மனதிற்குக் கொஞ்சமேனும் வருத்தங் கிடையாது. உங்கள் பேரில் எனக்கும் அபிமானமில்லாமற் போகவில்லை. ஆனால் உங்கள் அபிப்பிராயம்போல் நான் இருக்க முடியுமா? அப்படி என்னை ஆக்கிவிடுவதானால் செய்து விடுங்கள். பகவான் எனக்கு எப்படி கட்டளை இட்டிருக்கிறாரே அவ்வண்ணமே நான் தவறாது நடந்து வருகிறேன். அதை மாற்ற என்னால் முடியவில்லை. நீங்கள் மாற்றிவிட முடியுமானால் செய்து விடுங்கள். இனி நீங்கள் என்னிடம் வந்தால் என்னைப்பற்றி இன்னபடித் தானிருக்க வேண்டுமென்கிற கெட்ட அகங்கார எண்ணத்தை மட்டும் விட்டுவிடுங்கள்.

**வினா** : அவ்வாறே விட்டு விடுகிறோம். நீங்கள் எங்களுக்கு என்ன போதிக்கப் போகிறீர்கள்?

**விடை :** ஆதிபர ஸ்ரீமந் நாராயண ஸ்ரீதேவி, பூதேவி, நீளாதேவி லக்ஷ்மி தேவி சமேத நித்திய மங்கள அனந்த கல்யாண குண அப்பிராகிருத வைகுண்டவாச நித்திய சூர்ய சகித எம்பெருமானது திவ்ய லீலா விசேஷணங்களை ஆழ்வாராசாரிய சம்பிரதாய மூலமான பக்தியைப் போதிக்க ஆரம்பிக்கப் போகிறேன்.

**வினா :** அவ்வாறே கேட்டு நடக்கத் தயாராயிருக்கிறோம்.

**விடை :** தினம் காலை மாலை வந்து போய்க் கொண்டிருங்கள்.

**வினா :** நீங்கள் எங்களுக்கு வைஷ்ணவ மதத்தையும் சைவர்களுக்குச் சைவ சித்தாந்தத்தையும் அத்வைதம், காணாபத்தியம், கௌமாரம், சாக்தேயம், புத்தம் முதலிய மதஸ்தர்களுக்கும் போதிக்கிறீர்கள். அவ்வாறான உங்களுடைய முடிவான அபிப்பிராய மேதுவோ தெரியவில்லை. அனைவருமறிந்து கொள்ளும்படி கொஞ்சம் பொதுவாகத் தெரியப் படுத்த வேண்டும்.

**விடை :** நான் பகவதாக்ஞையால் உலகத்திற் பிறந்தவன். இது அனுபவத்தில் நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டும். அவருடைய உத்திரவால் உலக உபகார வடிவ கைங்கரியங்களைச் செய்பவன். மற்ற யாதொருவருடைய அபிப்பிராயத்தையும் கேட்காமல் என் சொந்த இஷ்டம்போல் நடப்பவன். ஒரு மதம், ஜாதி, குலம், ஊர், தேசம், தெய்வம், அரசன், மனிதன், சாஸ்திரம், ஆலயம், செல்வம் முதலிய ஒருவித கட்டுப்பாட்டுக்குள்ளுமடங்காமல் மீறியவன். சர்வ சன்னியாசங்களையும் ஒருங்கே கடந்தவன்.

எலலா மதங்களையும், சாதிகளையும், மனிதர்களை யும் ஒரே சமமாகப் பார்க்குமெண்ணமுடையவன். எல்லா மதங்களும் பேதமின்றி ஒரே கடவுளையே அடையு மென்ற திடமான நிச்சயத்தையுடையவன். கடவுளுக்கும் மனிதனுக்கும் அதிக தூரமில்லை யென்ற அபிப்பிராய முடையவன். நம்முடைய முயற்சியில்லாமலே பகவான் தானே மோக்ஷத்தைக் கொடுத்து விடுவாரென்ற சோம்பேறி எண்ணங்களை விட்டொழித்தவன். விசிஷ்டாத்வைத மதத்திலும் ஆழ்வார் ஆசாரியர்களிடத்திலும் அளவு கடந்த அன்புள்ளவன். எல்லா மதங்களிலும் அபிமான முடையவன். எல்லா விஷயங்களிலும் சமமான நோக்கமுடையவன். அகண்ட மதத்தை மட்டும் அனுஷ்டிக்கக் கூடியவன். எது வந்தாலும் அசையாம லிருக்க வேண்டிய உள்ளமுடையவன். அடியார் களிடத்தில் அபார விஸ்வாஸமுள்ளவன். ஜாதிபேதம் பார்ப்பதில் பிரியமில்லாதவன். இவ்வாறு எனது பூர்ண சத்திய எண்ணம் பலவுள்ளன. அவற்றை எல்லாம் இங்கு விவரிக்கில் விரியுமெனச் சங்கிரமமாகக் கூறப்பட்டது.

**வினா** : வைஷ்ணவ மதத்தில் பிறந்த நீங்கள் ஏன் சமரச மதத்திற்கு வரவேண்டும். அப்படியாராவது, பெரியவர்கள் தாங்கள் பிறந்த மதத்தைவிட்டு வேறு மதங்களுக்குப் போயிருக்கிறார்களா?

**விடை** : அதை எல்லாம் அதிகமாக இங்கு சொல்ல ஆரம்பித் தால் பெரிய கிரந்தமாகி விடும். ஆதலால் சுருக்கமாச் சொல்ல ஆரம்பிகிறேன். ஆயிரம் வருஷங்களுக்கு முன் தொண்டை மண்டலத்திற் பிறந்த அவதாரம்ச வடிவ இராமானுஜாசாரியார் பிறந்த மதம்,

ஸ்மார்த்தம். அதை அடியோடு விட்டு விட்டு, வைஷ்ணவத்திற்கு வந்து விட்டார். நஞ்சீயர் என்ற ஆசாரியர் ஸ்மார்த்தத்திலிருந்து வைஷ்ணவ மதத்திற்கு வந்து விட்டார். இவையெல்லாம் அவரவர்கள் பூர்வகர்மானுசாரமாக நடக்கிறபடியால் ஒருவர் சொல்லி முடியாது.

**வினா** : ஸ்வாமி நாங்கள் ஆதியில் தெரியாமற் கேட்டு விட்டோம். அந்த விஷயமாய் ஸவாமிகள் மன்னிக்க வஸண்டும்.

**விடை** : சகல மன்னிப்புகளையும் ஏற்றுக் கொள்பவர் பகவானாகையால் அவரிடம் மன்னிப்புக் கேட்டுக் கொள்ளுங்கள்.

**வினா** : யாரிடத்தில் எப்படிச் செய்வது?

**விடை** : இன்னகர், வரதராஜ ஸ்வாமிகள் சன்னிதானத்தி லேயே மன்னிப்புக்கேட்டுக் கொள்ளலாம்.

**வினா** : அப்படியே செய்கிறோம்; போய் வருகிறோம்.

**விடை** : அப்படியே போய் வாருங்கள்.

ஓம் தத் ஸத்

ஓம்

தத் ஸத்

தேவார நகரம்

சுத்த அத்வைதி அருட்கவி

# ஸ்ரீ

# விலக்ஷணானந்த ஸ்வாமிகள் விடை

---

இரண்டாம் பதிப்பு

---

இஃது

முசிரி மு. **இராமலிங்கம்** என்பவரால்

**இஃது 1918 மறு பதிப்பு**

## முன்னுரை

அன்பர்களே, தேவார நகரம் சுத்தாத்வைத அருட்கவி ஸ்ரீ விலக்ஷணானந்த ஸ்வாமிகள் சில காலமாக பல இடங்களுக்கு எழுந்தருளியிருந்தார். அத்தருணங்களில் பல சந்நியாசிகளும் சில கிரகஸ்தர்களும் அநேக வித்துவான்களும் முக்கியமான இராஜாக்களும் வினாவிய வினாக்களுக்கு தகுந்த சம்பிரதாயமாகக் கூறிய விடைகளைப் பொருக்கிக் (கீழ் வரைந்து) அச்சிடலாயினோம்.

இங்ஙனம்,
**மு. இராலிங்கம்**

ஓம் தத் ஸத்

# ஸ்ரீ விலக்ஷணானந்த ஸ்வாமிகள் விடை

1. **வினா** : ஸ்வாமிகள் ஓர் நாள் காஞ்சீபுரத்தில் வீதியிலுலாவிக் கொண்டிருக்கும்போது சில வீர வைஷ்ணவர்கள் வந்து ஸ்வாமிகளே, "அத்வைதம், துவைதம், விசிஷ்டாத்வைதம் இம்மூன்றில் மோக்ஷமடையு மார்க்கமெது" வென்றார்கள.

**விடை** : இம்மூவிதப் பாகுபாடு உங்களுக்குத் தோற்றுகிறவரை முக்தி கிடைக்காதென்றார்.

2. **வினா** : பின் எந்த மார்க்கத்தில் முக்தி கிடைக்குமென்று கேட்டதற்கு,

**விடை** : சர்வமத நூல்களும் சர்வ மத ஆசாரியர்களும் சர்வ மதாந்தா தெய்வங்களும் எப்போது ஒன்றாகத் தோன்றுமோ அப்போது கிடைக்குமென்றார்.

3\. **வினா** : ஸ்வாமிகள் ஓர்நாள் ரெயிலில் போகும்போது ஒரு துரை ஸ்வாமிகளே எங்கே போகிறீர்களென்று கேட்டதற்கு

**விடை** : என்னூருக்குப் போகிறோமென்றார்.

4\. **வினா** : எங்கிருந்து வருகிறீர்களென்று கேட்டதற்கு

**விடை** : திருப்பாழூரிலிருந்து வருகிறோமென்றார்.

5\. **வினா** : ஆத்மா ஒருவனுண்டோ என்று கேட்டதற்கு

**விடை** : இப்போது உனக்கு இல்லையென்றார்.

6\. **வினா** : சில நாட்களுக்கு முன் ஸ்வாமிகள் ஈரோடு போயிருந்தார். அப்போது ஒரு கலெக்டர், ஸ்வாமிகளே, உங்களுடைய ஹிந்து மதத்தில் மாமிசம் புசித்தல் கூடாதென்கிறீர்களே கண்ணப்ப நாயனார் சாப்பிட்டிருக்கிறாரே அப்படியிருக்க நானும் சாப்பிட்டாலென்ன வென்றான்.

**விடை** : கண்ணப்பர் கண்ணைத் தோண்டினார். நீ ஒரு மயிரைத் தோண்டு பார்ப்போமென்றார்.

7\. **வினா** : சில சன்னியாசிகள் ஸ்வாமிகளிடம் வந்து சந்நியாசமென்றா லென்ன வென்றதற்கு,

**விடை** : நீங்கள் கேட்டது தானென்றார்.

8\. **வினா** : பிரபஞ்சத்திலிருக்கும் பெண்கள் புருஷர்களை மயக்கிவிடுகிறார்களே அதற்கென்ன செய்யலா மென்றார்கள்.

**விடை** : நீங்களும் பெண்ணாய் விடுங்களென்றார்.

9. **வினா** : குற்றம் ஸ்திரீகளிடமா, புருஷர்களிடமா என்று கேட்டதற்கு,

**விடை** : இருவரிடத்திலுமில்லை மனதிலிருக்கிற தென்றார்.

10. **வினா** : பல கிருஹஸ்தர்கள் ஸ்வாமிகளிடம் வந்து நாங்களெல்லோரும் எப்படி ஞானமடைவ தென்றதற்கு.

**விடை** : நீங்கள் உங்களைப் பார்த்தால் அடையலா மென்றார்.

11. **வினா** : உயர்ந்த மலை எதுவென்று கேட்டதற்கு,

**விடை** : துரியாதீத மலையென்றார்.

12. **வினா** : ஞானமடைவதற்கு குரு வேண்டுமோ என்று கேட்டதற்கு,

**விடை** : குரு ஒருவர், தானொருவன், உபதேசமொன்று என்ற பிரிவு இருக்கும் வரை நான்கு குரு வேண்டுமென்றார்.

13. **வினா** : சில முஹமதியர்கள் ஸ்வாமிகளிடம் வந்து ஸ்வாமிகளே எங்கள் இஸ்லாம் மதத்தைப் பற்றித் தங்களுக்கு என்ன அபிப்பிராய மென்தற்கு,

**விடை** : நானே முஹமது நபியின் மார்க்கத்தில் நடப்பவனென்றார்.

14. **வினா** : சில ஞான சாதனர்கள் ஸ்வாமிகளிடம் வந்து பிரஹ்ம சுபாவத்தைக் கூற வேண்டுமென்று கேட்டதற்கு,

**விடை** : பேச மாட்டேனென்று கூறிவிட்டார்.

15. **வினா** : ஸ்வாமிகள் ஓர்நாள் பம்பாய் இராஜவீதியில் உலாவிக் கொண்டிருக்கும் போது சில மஹாராஷ்டிரப் பிராமணர்கள் வந்து பக்தி ஞானம் யோகம் கருமம் இந்நான்கிலெது பெரிதென்றார்கள்.

**விடை** : அவரவர்கள் பக்குவத்துக்குத் தகுந்தபடி எல்லாம் பெரிதென்றார்.

16. **வினா** : ஆனால் எங்களுடைய பக்குவத்துக்கு எது பெரிதென்று கேட்டதற்கு,

**விடை** : பக்தியென்றார்.

17. **வினா** : பக்தியின் லக்ஷணங்களைக் கூற வேண்டு மென்று கேட்டார்கள்.

**விடை** : ஏகாந்தமாக வந்த கேளுங்களென்றார்.

18. **வினா** : சுவாமிகள் ஓர்நாள் சென்னை மாநகரம் எழுந் தருளியிருந்தபோது சில சைவ சித்தாந்திகள் வந்து ஸ்வாமிகளே என்ன செய்தால் சிவத்தை அடையலாமென்று கேட்டதற்கு,

**விடை** : என்ன செய்யலாமென்று நினைக்கிறீர்களோ அதைச் செய்தா லடையலா மென்றார்.

19. **வினா** : மோக்ஷத்திற்கு வழி யெத்தனை என்றார்கள்.

**விடை** : எல்லாம் வழி தானென்றார்.

20. **வினா** : ஆனால் முக்கியமான வழி யெதுவென்று கேட்டதற்கு

**விடை** : நீங்கள் எதை அனுஷ்டிக்கிறீர்களோ அதுதானென்றார்.

21. **வினா** : ஸ்வாமிகள் ஓர்நாள் திருச்சினாபள்ளி ரோமான் கத்தோலிக் சர்ச்சுக்குப் போயிருந்தார். அச் சமயம், அப்பாதிரியார் ஸ்வாமிகளை நோக்கி, நீங்கள் எல்லா மதத்தையும் அனுசரிக்கிறீர்களே அதற்கு என்ன காரணமென்று கேட்டதற்கு,

**விடை** : நான் கிணற்றுத் தவளையல்ல வென்றார்.

22. **வினா** : சில மனிதர்கள் ஸ்வாமிகளிடம் வந்து நீங் களேன் ஜலம் சாப்பிடுவதில்லை யென்றதற்கு,

**விடை** : நாம் ஓடுகிற ஜலம் சாப்பிடுவதல்ல வென்றார்.

23. **வினா** : சில வேதாந்திகள் ஸ்வாமிகளிடம் வந்து உங்களுக்கு வயது என்ன என்றார்கள்.

**விடை** : நானோ என்றுமழியாத சிரஞ்சீவி என் வயதிற்கு கணக்கில்லை யென்றார்.

24. **வினா** : ஆனால் நீங்கள் பிறந்ததாவது உங்களுக்குத் தெரியுமோ வென்றார்கள்.

**விடை** : நான் பிறக்கவே யில்லை யென்றார்.

25. **வினா** : என்னென்ன புஸ்தகங்கள் படித்தால் மனதடங்கு மென்று கேட்டதற்கு

**விடை** : சுவானுபவப் புஸ்தகம் படித்தால் போது மென்றார்.

26. **வினா** : அதன் கிரயமென்ன வென்றதற்கு

**விடை** : நாலரை அணா வென்றார்.

27. **வினா** : எந்த நாலரை யணாவென்று கேட்டதற்கு

**விடை** : சாக்கிரம் ஒரு அணா, சொப்பனம் ஒரு அணா, சுழுப்தி ஒரு அணா, துரியம் ஒரு அணா, துரியா

தீதம் ஒரு அரை யணா ஆக நாலரையணா வென்றார்.

28. **வினா** : அந்த அணா எந்த இடத்தில் கிடைக்கு மென்று கேட்டதற்கு

**விடை** : அகண்டாகார ஷாப்பில் கிடைக்குமென்றார்.

29. **வினா** : அந்த ஷாப்பு எந்த ஊரிலிருக்கிறதென்றார்கள்.

**விடை** : எல்லாங் கடந்த வூரிலிருக்கிறதென்றார்.

30. **வினா** : இப்படியே பேசினால் முடிவெது வென்றதற்கு

**விடை** : பேச்சில்லாதிருப்பதுதான் முடிவென்றார்.

31. **வினா** : இவ்வளவு சாஸ்திரமும் எங்கு படித்தீர்களென்று கேட்டதற்கு

**விடை** : எங்கும் தானென்றார்.

32. **வினா** : எங்களுக்கு எப்போது ஞானம் வருமென்றார்கள்.

**விடை** : ஞானம் வருவதுமில்லை போவதுமில்லை யென்றார்.

33. **வினா** : சுவாமிகள் ஓர்நாள் ஏகாந்தவூருக்குப் போகும் போது இடையில் திருப்பாழூர் மார்க்கமாகப் போக நேர்ந்தது. அவ்வூரிலிருக்கிற ஒரு பெரிய சூனியக் குடித்தனக்காரன் ஸ்வாமிகளிடம் வந்து எங்கு போகிறீர்களென்று கேட்டதற்கு,

**விடை** : திருப்பாழுருந்தாண்டி இருள்பாழ், அருள்பாழ், தெருள்பாழ் இம்மூன்றுங் கடந்து அப்பாலுள்ள எங்களூருக்குப் போகிறோமென்றார்.

34. **வினா** : ஓர் வேதாந்தி வந்து ஸ்வாமிகளைத் தரிசித்து வேத சம்மதமான மதமெது என்றார்.

**விடை** : வேத சம்மதமில்லாத மதமென்றார்.

35. **வினா** : சில சைவர்களை ஸ்வாமிகளைத் தரிசித்து முக்கணரைப் பார்த்திருக்கிறீர்களோ என்றதற்கு,

**விடை** : நாமெல்லோரும் முக்கணர் தானென்றார்.

36. **வினா** : அதெப்படி யென்தற்கு,

**விடை** : அருள் கண், தெருள் கண், நெருப்புக் கண் என்னு மூன்றுமுடையவர் பரமசிவன், நாமெல்லோரும் இருள் கண், மருள் கண், வெளிக் கண் மூன்றுடைய வறாயிருப்பதால் நாமும்முக்கண்ணர் தானென்றார்.

37. **வினா** : சம்பந்த ஸ்வாமிகள் என்று கேள்விப்பட்டிருக் கிறீர்களோவென்ற கேட்டதற்கு,

**விடை** : நாமெல்லாம் சம்பந்த ஸ்வாமிகள் தான் என்றார்.

38. **வினா** : எப்படியென்றார்

**விடை** : நமக்கும் பெண்சாதி சம்பந்தம், குடும்ப சம்பந்தம், உலக சம்பந்தம், பிள்ளை சம்பந்தம் முதலிய சம்பந்தமிருப்பதால் நாமும் சம்பந்த ஸ்வாமிகள் தானென்றார்.

39. **வினா** : ஸ்வாமிகள் காசி மாநகரத்தின் ஹரிச்சந்திர பஜாரில் உலாவிக் கொண்டிருக்கும்போது சில புத்த மதஸ்தர்கள் வந்து ஸ்வாமிகளே எங்கள் புத்தரை பற்றியும், அவரது மதத்தைப்பற்றியும் தங்களுக்கு என்ன அபிப்பிராயமென்று கேட்டதற்கு,

**விடை :** எங்களுடையது உங்களுடையது என்று பேத மில்லாத புத்த மதந்தான் என் மதமென்றார்.

40. **வினா :** ஸ்வாமிகளிடம் சில சாமிமார்கள் வந்து ஸ்வாமிகளே உங்களிடம் எல்லோருங் கூடிக் கொண்டிருக்கிறார்களே அதற்கென்ன காரண மென்றார்கள்.

**விடை :** எல்லோருங் கூடுமிடத்திற்குப் போனதனால் தானென்றார்.

41. **வினா :** சில சகோதரர்கள் ஸ்வாமிகளிடம் வந்து நீங்கள் ஒரே இடத்தில் நிஷ்டை யிலிருந்தாலென்ன வென்றார்கள்.

**விடை :** நான் ஒரு இடத்திலிருப்பவனல்ல எங்கு மிருப்பவ னென்றார்.

42. **வினா :** சில அத்வைதிகளும், துவைதிகளும் விசிஷ்டாத்வைதிகளும் ஸ்வாமிகளிடம் வந்து பிரமா, விஷ்ணு, ருத்ரரென்று மூன்று மூர்த்தி களுண்டோ வென்றார்கள்.

**விடை :** யதார்த்தத்தில் மூவருமில்லை யென்றார்.

43. **வினா :** பின் இருப்பதெதுவென்று கேட்டதற்கு,

**விடை :** இப்படி உங்களை என்னிடங் கேட்கச் சொன்ன தெதுவோ அதுதானிருப்ப தென்றார்.

44. **வினா :** நீங்கள் எந்த மதத்தைச் சார்ந்தவரென்று கேட்டதற்கு,

**விடை :** சம்மதத்தைச் சார்ந்தவனென்றார்.

45. **வினா** : ஆதியிலிருந்த மஹரிஷிகளுக்கெல்லாஞ் சம்மத மான மதமெதுவென்றார்?

**விடை** : ஆதி மதந் தானென்றார்.

46. **வினா** : ஸ்வாமிகள் கும்கோணத்திலுள்ள ஓர் ஸ்மார்த் தர் வீட்டுக்குச் சென்றிருந்தபோது போஜனம் பண்ணுவதற்கு இலையிலுட்கார்ந்தவுடன் குளம்பு ரசம் போட வந்தார்கள்.

**விடை** : நான் குளம்பு ரசம் சாப்பிடுவதில்லை. சம ரசம் தான் சாப்பிடுவதென்றார்.

47. **வினா** : ஸ்வாமிகள் கல்கத்தாவுக்குச் சென்றிருந்தபோது அபேதானந்தர், பிரமானந்தர், சார்வானந்தர், யோகானந்தர், அத்தவைதானந்தர், துரியானந்தர் என்ற இராமகிருஷ்ண பரம ஹம்ஸருடைய சிஷ்யர்களுடனிருக்கும்போது அவர்கள் எல்லோரும் ஸ்வாமிகளே ஆத்ம சாக்ஷாத் காரத்தை அடையுமுபாயமொன்று சொல்ல வேண்டுமென்று கேட்டார்கள்.

**விடை** : சன்னியாசிகளே. என்னிடத்தில் நான்கு விதமான கண்ணாடியிருக்கின்றன. அதாவது, பச்சைக் கண்ணாடி, ஊதாக் கண்ணாடி, நீலக் கண்ணாடி, ஆத்மக் கண்ணாடி. இதில் முதல் மூன்றுக் கண்ணாடியைப் போட்டுப் பார்த்தால் அதனதன் வர்ணமாகப் பார்க்குமிடமெல்லாந் தோற்றும். ஆத்மக் கண்ணாடியைப் போட்டுப் பார்த்தால் ஆத்மாவாகத் தெரியும். அதுதானு பாயம் என்றார்.

*58.* **வினா** : அந்தக் கண்ணாடி யாரிடத்தில் கிடைக்கு மென்றார்.

**விடை** : ஸ்ரீ காசியில் மணிகர்ணிகா கட்டடத்தில் கைலாசத்திலிருந்து வந்து பெரிய கடை வைத் திருக்கிற விஸ்வநாத செட்டியாரிடத்தில் வாங்க லாமென்றார்.

*49.* **வினா** : அவர்களெல்லோருங்கூடி ஸ்வாமிகள் இவ்விடத்திலேயே எப்போதுமிருக்க வேண்டு மென்றதற்கு,

**விடை** : நான் வேறாகவும் நீங்கள் வேறாகவுமிருந் தால்லவோ இருக்க வேண்டுமென்றார்.

*50.* **வினா** : அப்படி வேறாக தோற்றாத ஞானம் வருவரை இருக்க வேண்டுமென்றதற்கு,

**விடை** : வேறாகத் தோற்றாத வித்தையை முன்னேயே சொன்னேனே யென்றார்.

அடிமை,

**மு. இராமலிங்கம்**

# பாரத கண்டத்தின்
# தற்போதுள்ள
# பரிதாப நிலைமை

ஓம் தத் ஸத்

# பாரத கண்டத்தின் தற்போதுள்ள பரிதாப நிலைமை

ஈஸ்வரப் பிரதிநிதிகளான பிரஹ்:ம சக்தி பெற்ற மஹரிஷிகளால் உலகோபகாரமாக ஆதியில் ஏற்படுத்தப்பட்டிருக்கிற புராண இதிகாச ஸ்மிருதி முதலியவைகளை ஆதரிப்பார்களின்றி அலைந்து கொண்டிருக்கின்றன.

ஈஸ்வர சங்கற்பமாய் ஒலி வடிவமாய் நாதரூபமாய் சப்தாகாரமாய் வெளி வந்த அனாதி வேதங்களை ஆதரிப்பவர்கள் ஒருவருமில்லை.

**பிராம்மண** வைதீக தர்மங்கள் எங்கேயோ ஓடி ஒளிந்தன.

துஷ்ட நிக்கிரக சிஷ்ட பரிபாலனஞ் செய்து ஜனங்களை ரக்ஷிக்கக் கூடிய பற்றற்ற உண்மையான **க்ஷத்திரிய அரசன்** இல்லவேயில்லை.

ஆறாயிர மைல் தூரத்திலிருந்து வர்த்தக நிமித்தமாய் வயிறு பிழைக்க வந்த உலகமயக்க அன்னிய மதஸ்தர்களான ஸ்வேத நிறத்தையுடைய ஜாதியர்கள் விதிமுறை யில்லாமல் கண்டபடி நமது நாட்டை ஆண்டு வருகிறார்கள்.

நமது நாட்டிலுள்ள அஸ்திவாரமான சாஸ்திரங்களையும் சகலவித உலக வஸ்துக்களையும் மூலத்தோடு தோண்டிக் கொண்டு போய்க் கொண்டிருக்கிறார்கள்.

**கற்பு நிலைமை** வாய்ந்த கண்மணிகளைக் காண்பது அரிதாய் விட்டன.

உத்தமோத்தம சன்னியாசிகளையும் துறவிகளையும் வானப்பிரஸ்தர்களையும் எங்கேயோ ஏகதேசமாய்க் காணுங் காலமாய் விட்டது.

விதிப்படி நடக்கக் கூடிய கிரகஸ்தர்களைப் பார்ப்பது பெரிய காரியமாய் விட்டன.

நல்ல சட்டப்படியுள்ள **பிரம்மசாரிகள்** இல்லவே யில்லை யென்று சொல்லி விடலாம்.

**பிதுர்வாக்கிய மாதுர்வாக்கிய** குரு வாக்கிய தெய்வ வாக்கிய பரிபாலனஞ் செய்யப்பட்டவர்கள் **இக்ஷுவாகு, ஹரிச்சந்திரன், நளன், சிபி, ஸ்ரீராமபிரான், பரதன், பீஷ்மர், அருச்சுனன், பரிக்ஷித்து அரசன்** முதலியவர்களது காலங் களோடேயே போய்விட்டதென்று சொல்லத் தகுந்ததாயிருக் கின்றது.

**எல்லாம்வல்ல முழு முதற் கடவுளை** அறிய இச்சை கொண்டு புருஷப் பிரயத்தனம் செய்யப் புறப்படுகிற ஞான யோகிகள் **சிவராஜ யோகிகள் பரம ஏகாந்த பக்தி யோகிகள் ஸம்ப்ரக்ஞாத அஸம்ப்ரக்ஞாத ஸவ்விகற்ப நிர்விகல்ப ஸகஸ நிஷ்ட உபசாந்த வைராக்கிய சீலர்கள், மஹாதபசிகள்** இன்னோர்களெல்லாம தங்கித் தங்கள் தங்கள் காரியங்களைப் பூர்த்தி பண்ணிக் கொள்ளத் தகுந்த குகைகள் மலைகள் ஆஸ்ரமங்கள் ஆரண்யங்கள் ஆற்றோரங்கள் இவைகள் எல்லாம் பாழடைந்து பரதவித்து ஞானத் தடைக்கு ஆளாகி விட்டார்கள்.

புத்திரர்கள் பிதாக்களது சொற்படி நடப்பதில்லை.

புத்திரிகள் மாதாவின் கட்டளையை மீறிச் செல்லுகிறார்கள்.

மாணாக்கர்கள் **ஆசாரியர்களை** மீறி நடக்கிறார்கள்.

குருமார்களெல்லாம் வயிற்றுப் பிழைப்புக்காகவும் கீர்த்திக்காகவும் சிஷ்யர்களைத் தேடி வந்து கொண்டிருக்கிறார்கள்.

அந்த சிஷ்யர்களும் அந்த குருமார்களை மதிப்பதில்லை.

பெண்கள் மணவாளனது உத்தரவைக் கடந்து செல்ல ஆரம்பித்து விட்டார்கள்.

விவாக மாகாத கன்னிகைகள் ஒரு புருஷனை விதிப்படி வகிப்பதற்கு முன்னாலேயே கற்புநிலைமைக்குப் பங்கம் விளை வித்துக் கொண்டிருக்கிறார்கள். புருஷர்கள் சொந்த மனைவி களைவிட்டு மறு மனைவியர்களை இச்சித்து நடக்கிறார்கள்.

குடும்ப ஸ்திரீகள் புருஷர்களின் நடத்தைகளுக்கேற்ற வாறு தவறாது நடந்து வருகிறார்கள்.

அன்னிய நாட்டு நாஸ்திக மத அனாகரீகர்கள் வந்து குடி புகுந்தும் புகவுமாயிருக்கின்றன.

அசட்டு ஆசார வழக்கங்கள் அதிகப்பட்டு உண்மையாசாரப் பழக்கங்கள் நிலைகுலைந்து விட்டன.

ஆதிகாலங்களில் சக்கிரவர்த்திகளால் ஏற்படுத்தப்பட்ட சிற்றரசர்களெல்லாம் சிறிய புத்தியோடு கூடி ஏழைக்குடிகளை ஹிம்சை செய்து வருகிறார்கள்.

**பாரதநாட்டைச்** சுற்றியுள்ள நாடுகளெல்லாம் சன்மார்க்க விரோதச் செய்கைகளும் ஹிம்சா தர்மபோதகர்களும் துஷ்ட புத்தியுடையதுமா யிருப்பதும் அந்தந்த நாடுகளின் மேற்கூறிய செய்கைகள் கப்பல் கப்பலாக நமது தேசத்தில் இறக்குமதி யாகின்றன.

பெரிய சக்கிரவர்த்திகளும் அவர்களுக்கடங்கி நடக்கும் அரசர்களும் இயற்கையான சொந்த அறிவில்லாமல் தங்களைச் சூழ்ந்திருக்கப்பட்ட துஷ்ட மந்திரிகளது கூட்டுறவால் அரசாளும் அனுபவ முறைகளை மறந்த பொம்மைகள் போல அரியணையில் வீற்றிருக்கிறார்கள்.

தேவர்களும் போற்றத் தகுந்த புண்ணிய சொரூபமான பசுவைக் கண்டபடி தினம் லக்ஷக்கணக்காகக் கொன்று தின்கிறார்கள்.

பஞ்சமஹா பாதகங்கள் பல விடங்களிலும் பரவி வந்து கொண்டிருக்கின்றன.

சகல உலக மனுஷ்யர்களும் தெய்வத் தன்மையை மறந்து திண்டாடுகிறார்கள்.

மனத்திற்கு நடுக்கத்தையும் திகிலையும் உண்டு பண்ணக் கூடிய சாதன வஸ்துக்கள் எங்கு பார்த்தாலும் குவிந்து விட்டன.

யாதொரு பிரயோஜனமுமில்லாத சன்மார்க்க விரோத மான வீண் கெட்ட வார்த்தைகளை ஜனங்கள் பேச ஆரம்பித்து விட்டார்கள். துஷ்டர்களுக்கு மதிப்பும் சிஷ்டர்களுக்கு அவமதிப்பும் கொண்ட நாளாயிருக்கின்றன.

முதலில் ஆசையாக பேசிப் பின்னால் மோசம் செய்கிற மனிதர்கள் அதிகமாகிக் கொண்டு வருகிறார்கள்.

தெய்வப் பிரதிநிதிகளான, **ஈஸ்வரப் பிரதிபிம்ப தேவாலய அர்ச்சாவதார சகுண ரூபங்களையும் பற்றற்ற துறவிகளையும் குலசாரியர்களையும் மாதா பிதாக்களையும் பெரியோர்களை யும்** கண்டால் பூமியில் விழுந்து பயபக்தியுடன் நமஸ்காரஞ் செய்வதற்கு முடியாத அவ்வளவு பரிதாப நிலையோடு கூடிய அறிவீனர்களான அதிகாரப் பழக்கங் கொண்ட லௌகீகப் பெரிய மனிதர்கள் குவிந்து விட்டார்கள்.

**பதிவிரதா சிரோன்மணிகளான** உத்தம தரும பத்தினி களைக் கற்பழிக்க வேண்டுமென்ற சங்கல்பங்களோடு கூடிய துஷ்டகாமவிட புருஷர்கள் ஊரெங்கும் மலிந்து விட்டார்கள்.

எதார்த்த அனாதிகால ஆதிதத்துவ வைதீக வேத ஞான சனாதன தர்மங்களுக்குப் போட்டி போட்டுக் கொண்டு சில தற்கால அனித்திய மதாந்தரங்கள் தோன்றிச் சில உத்தமர்கள் கேடடைந்து விட்டார்கள்.

தெய்வ பூஜைகள் பிதுர்களின் சிரார்த்தங்கள், பஞ்ச மஹா எக்ஞங்கள் மாதா பிதா குரு ஆராதனைகள் நிஷ்டைகள் ஜெபங்கள் ஹோமங்கள் தபசுகள் வேதங்கள் ஆகம தந்திரங்கள் சாஸ்திரங்கள் பெரியோர்கள் பாராயணங்கள் க்ஷேத்திரங்கள் தீர்த்தங்கள் உபதேசங்கள் பரிசுத்த போதகர்கள் ஞானநிஷ்டாபரர்கள் தெய்வ விக்கிரங்கள் சாந்தி மஹரிஷிகள் ஆதிகால சரித்திரங்கள் அவதார புருஷர்கள் தெய்வ தூதர்கள் இன்னோர்களிடத்திலெல்லாம் விஸ்வாஸமும் நம்பிக்கையும் குறைந்த காலமாய் விட்டன.

உண்மையான அனுபவமுடைய எதார்த்த ஞானிகள் இருப்பார்களோ இருக்க மாட்டார்களோ வென்றெண்ணும் படியான காலமாகி விட்டன.

இச்சையற்ற துறவிகளை யாராவது கண்டால் அவர்களது நிலைமையை அறிய முடியாத விவேகங் குன்றிய காலமாயிருக்கின்றன.

தேசத்தின் பூர்ண நன்மைகளை விளைவிக்கக் கூடிய பிரபலமான முயற்சி செய்து வந்தவரும் மஹா பண்டிதரும், வருணாஸ்மர தர்ம விதிப்படி நடப்பவரும் இல்லற வாசியும் இரும்புபோன்ற மனத்தையுடையவரும் அந்தணர் குலத்தவரும் அளவு கடந்த அறிவையுடையவரும் ஆசார சீலரும் லௌகீகம் வைதீகம் இரண்டிலும் தேர்ச்சி பெற்றவரும், மேற்குத் திசையிலுள்ள ஐரோப்பா நாட்டு அனாகரீக அசட்டு அசாரப் பழக்கவழக்கங்களை நமது இந்தியாவினின்று அடியோடு அகற்றிவிட எண்ணங் கொண்டு முயற்சி செய்து வந்த வரும்

பாரததேவியின் அருந்தவப் புதல்வரும் தேச பக்த சிகாமணியும் யாருக்கும அடங்காமல் ஆண்டவனுக்கும் அவனது கட்டளைக்கும் அடங்கி நடந்தவரும் சுவாதந்திரிய புருஷரும் ஆத்மஞானியுமாகிய **லோகமான்ய பால கெங்காதர திலக மஹரிஷி**யைப் போன்ற உத்தம பரம சாதுகளையுங் கூட அனியாய அரசாங்கத்தார் நியாயமில்லாத சட்டங்களைக் கொண்டு சிறைபுகும்படி செய்த காலமாய்விட்டன.

தேச ஜனங்களிடத்திலுள்ள செல்வங்களை யெல்லாம் அன்னிய அரசாங்கக் கூட்டத்தார் தந்திரமாய் மெள்ள மெள்ளப் பறித்துக் கொண்டு போகுங் காலமாய்விட்டன.

கோடிக்கணக்கான ஏழை ஜனங்கள உடுக்க உடையின்றி உண்ண உணவின்றி இருக்க இடமின்றி ஊரூராகத தெருத்தெருவாக பிக்ஷையெடுக்குங் காலமாய் விட்டன.

லக்ஷக்கணக்கான வெளி வேஷதாரிகளாகிய காவி வஸ்திரப் போலிக் கூட்டங்கள் எல்லா இடங்களிலும் காணப்படு கின்ற காலமாய் விட்டன.

உண்மையான தரும சுபாவமுள்ள இல்லற வாசிகளைக் காண்பது கார்த்திகை மாதத்து மூன்றாம்பிறைச் சந்திரன் போலிருக்கின்றன.

நமது முன்னோர்களால் ஸ்தாபித்து வைததிருக்கப்பட்ட தேவாலயங்கள் மத தர்ம ஸ்தாபன மடாலயங்கள், ஆஸ்ரமங்கள் வருணாஸ்ரம தர்மங்கள் இவைகளெல்லாம் நிலைகுலைந்திருக்கின்றன.

நமது உண்மையான மதத்திற்கு இடையூறு செய்யக் கூடிய பல துஷ்ட மதங்கள் குடி புகுந்திருக்கின்றன.

கோடி கோடி திரவியங்கள் அளவற்ற நிலங்கள் செல்வாக்குகள், அதிகாரங்கள், இவைகளை யெல்லாம்

கொடுத்து **ஹிந்து மத சனாதன வைதீக தத்துவ சைவ வைஷ்ணவ அத்வைத துவைத விசிஷ்டாத்வைத ஸ்மார்த்த மாத்வ வீர சைவ மத சம்பிரதாய** வழக்கங்களையும் சாஸ்வத தர்மங்களையும் எக்காலங்களிலும் யாதொரு தடையிமின்றிச் செய்து கொண்டு வரும்படியாக ஆதிகால மஹா ராஜாக்களால் ஏற்படுத்தப்பட்டிருக்கிற நித்திய சாஸ்வத மதாசாரிய சிம்ஹாஸன உன்னத பீட உத்கிருஷ்ட சன்னியாஸ கிருஹஸ்த பிராம்மண மற்றைய வருண மடாதிபதிகளெல்லாம் அவரவர்கள் ஆதிகாலக் கட்டளையை அடியோடு மறந்து சாதாரண அஞ்ஞானிகள் போலாகி ஞான மோக்ஷ அனுபவங்கள் இன்னதென்றறியாமல் உலகபோக மயக்க சிஷ்ய சஹிதர்களாய் நித்திய தினறிவை மறந்து அனித்தியத்தின் புத்தியால் அல்லாத செயல்களைச் செய்து கொண்டு திரவிய சம்பாதன வுத்தேஸமாய்ச் சிஷ்ய யாத்திரைக்குப் புறப்பட்டுக் கொண்டும் ஜீவகாருண்ய விஷயமாய் வாயாற் போதித்துக் கொண்டு சரீரத்தின் முக்கிய ஆதாரமாகிய பிராண வாயுவானது அதன் முறைப்படி பனிரெண்டங்குல தூரம் ஓட வேண்டிய வழக்கத்திற்கு மீறி இருபத்து நாலங்குலம் முப்பதாறங்குலம் வீசக் கூடிய அளவு அபரிமிதமான பெருமூச்சு விடக்கூடிய அவ்வளவு பரிதாப நிலைமையை மனிதர்களை அடையச் செய்யும்படியாக அழகிய பல்லக்குகளில் ஏறிச் சஞ்சாரஞ் செய்து கொண்டு உலகோபகாரங்களை மறந்து ஸ்தூல சரீர தசேந்திரயங்களிலொன்றிகாய இரு கண்களையும் மூடவும் விழிக்கவும் தெரியக்கூடிய அவ்வளவு பெரிய நிஷ்டையைப் பழகிக் கொண்டு அவர்கள் ஸ்தானத்தில் அவர்களே தூங்கிக் கொண்டிருக்கும் காலமாய்விடடது.

மேற்கூறிய இந்த மடாதிபதிகளில் சிலர் நாற்பதைந்து அங்குல பிராணாயாமத்தையும் அறுபத்து நான்கு

தொண்ணூற்றாறு அங்குல சகஸ பிராணாயாமத்தையும் வழக்கமாய்ச் செய்து கொண்டு வருங்காலமாய் விட்டன.

போலி வேதாந்தங்களும் போலி மதங்களும் போலி ஆசாரியர்களும் போலிக் கூட்டங்களும் நிரம்பி ஜனங்கள் கோணலனா மார்க்கங்களிற் சென்று கொண்டிருக்கிறார்கள்.

ஸ்திரீகளெல்லாம் மணவாளனை ஆத்ம விசாரணையால் மீறிக் கடந்து ஆசார்ய ஸ்தானத்திலேறிப் பற்பல சிஷ்யக் கூட்டங்களோடு உலாவுங் காலமாய் விட்டன.

உண்மையான பரமஞான வைதீக மதத்தை அனுஷ்டிக்க ஆரம்பிப்பவர்களுக்கு ஏளனமே பிரயோஜனமாய்க் கூறுங் காலமாய் விட்டன.

இன்னதுதான் செய்வது இன்ன மார்க்கத்தில்தான் செல்வது என்பது தெரியாமல் தான்றோன்றி மார்க்கத்திற் சென்று கொண்டிருக்கும் நாதனில்லாத நாடாகி விட்டன.

இஸ்லாமியம் கிருஸ்தவம் இவ்விரண்டு மதங்களும் முறையே **மூடபலாத்காரம் நயவஞ்சம்** இவைகளைக் கொண்டு சிறிது அஞ்ஞான பலத்துடன் நமது பூர்வீக மதத்தை அசைக்க ஆரம்பித்து அந்தரங்கத்தில் அதிகமும் பகிரங்கத்தில் கொஞ்சமுமான துஷ்டபிரசாரங்கள் நடத்திக் கொண்டு வரும் நாளாய் விட்டது.

**ஆர்ய சமாஜம், பிரம்ம சமாஜம்,விவேகானந்த மதம், தியாசபி மதம், காந்தி கொள்கை, போலி ராஜீய மதம், ஆசாரச் சீர்திருத்த மதம்** இவைகள் ஏறக்குறை நாஸ்திகக் கொள்கைகளோடு தோன்றி நமது நாட்டையும் அதன் **ஆதிகால சனாதன தர்ம மார்க்கங்களையும்** கெடுத்துவிட்டது போதாமல் இன்னும கெடுத்துக் கொண்டும் வருகின்றன.

கர்மயோக அனுஷ்டானஞ் செய்து அதனால் சித்த சுத்தி வராத ஜனங்களுக்கு வேதாந்த சாஸ்திரத்தையும் அதன் தத்துவங்களையும் வேதாந்த ஆசாரியர்களால் போதிக்கப் பெற்று கர்மத்திலும் சிரத்தை குறைந்து அதையும் கைவிட்டு ஞானத்தையும் அடையமுடியாத பரிதாப நிலைமையை அடைந்து உபயப் பிரஷ்டர்களாய் விடுகிற பிரஜைகள் அபரிமிதமாக ஊரூராக நிரம்பி யிருக்குங் காலமாய் விட்டன.

**பஞ்சாக்ஷரத்திற்குப்** பத்து ரூபாய், **சடாக்ஷரத்திற்குப்** பனிரெண்டு ரூபாய் அஷ்டாக்ஷரத்திற்குப் பதினாறு, **துவா தசாக்ஷரத்திற்கு** இருபத்து நான்கு, **பிரணவத்திற்கு** ஆயிரம் **ஞான தீக்ஷைக்கு** மூவாயிரம், பெரிய மஹான் சன்னியாசிகள் பிக்ஷைக்கு ஐந்நூறு, தேவாலய தெய்வ விக்கிரங்களைத் தெரிசிப்பதற்குக் கண்டிப்பான ரூபாய்கள் இவ்விதமாகப் பரம வைதீக மந்திரங்களுக்கும் யீஸ்வர காரியங்களுக்குங் கூடத் திரவ்ய மயமாகுங் காலமாய்விட்டன.

இப்போது நமது நாடு இருக்கின்ற துக்ககரமான பரிதாப நிலைமைக்கு நாட்டிலுள்ள லக்ஷக்கணக்கான சந்நியாசிகளும் மற்றுள்ளவர்களும் வைராக்கிய புருஷர்களும் நிர்மானுஷ்ய வனாந்தரங்களுக்குச் சென்று பாரத நாட்டின் சம்பூர்ண க்ஷேமங்களையும் உத்தேசித்து ஈஸ்வரனைக் குறித்துத் தபசு செய்யப புறப்பட்டால் நல்லது. ராஜீய அன்னியர்களால் **நமது ராஜீய இந்தியா ஓர் வேளை ஜெயிக்கப்பட்டாலும் மத இந்தியா எந்த ராஜீ ஏகாதிபத்தியத்தாலும் ஒருக்காலும் ஜெயிக்க முடியாதென்பதை** நமது சகோதர சகோதரிகள் கண்டிப்பாகத் தெரிந்து கொள்வார்கள்.

**ஹிமோத் பருவத்தின்** உன்னத சிகரத்தில் **அர்மாண்டலீ** தடாகக் கரைச் சார்புகளில் தனது தெய்வீக் கூட்டத்தாரோடு கெம்பீர நோக்கத்துடன் உலாவி வருகின்ற சர்வ சக்தியுள்ள தேஜோமய க்ஷத்திரிய சுபாமுள்ள **அவதார புருஷன்** நமது

பாரத நாட்டின் மத ராஜீய சம்பூர்ண க்ஷேமங்களை ஸ்தாபிகக வரப்போகிறானாகையால் நமது நாடும் மதமும் சீர் குலைந்து விடுமோவென்று யாதொரு சிந்தனையும் மனத்தளவுமின்றிப் போலி மதம் போலி வேஷம் இவைகளுக்கு இடங் கொடுக்காமல் தீர உதார புத்தியோடு உண்மை மதத்தில் நிலைத்து நிற்பீர்களாக.

இப்படிக்கு,

**விலக்ஷணானந்தர்**

ஓம் தத் ஸத்

ஓம்
தத் ஸத்

தேவார நகரம் சுத்தாத்வைதி

அருட்கவி

## ஸ்ரீ விலக்ஷணானந்த ஸ்வாமிகள்

அருளிச் செய்த

# ஹிந்து மத ஸ்தாபனம்

இஃது
வில்லாபுரம்
ஸ்ரீ விலக்ஷணானந்த விலாசம்
பி.கே. நாராயணன் & கோ.,
புரோப்ரைட்டர்

இஃது 1925 மறு பதிப்பு

பாரத நாட்டின் மத ராஜீய சம்பூர்ண க்ஷேமங்களை ஸ்தாபிகக வரப்போகிறானாகையால் நமது நாடும் மதமும் சீர் குலைந்து விடுமோவென்று யாதொரு சிந்தனையும் மனத்தளவுமின்றிப் போலி மதம் போலி வேஷம் இவைகளுக்கு இடங் கொடுக்காமல் தீர உதார புத்தியோடு உண்மை மதத்தில் நிலைத்து நிற்பீர்களாக.

இப்படிக்கு,

**விலக்ஷணானந்தர்**

ஓம் தத் ஸத்

ஓம்
தத் ஸத்

தேவார நகரம் சுத்தாத்வைதி
அருட்கவி
ஸ்ரீ விலக்ஷணானந்த ஸ்வாமிகள்
அருளிச் செய்த

# ஹிந்து மத ஸ்தாபனம்

இஃது
வில்லாபுரம்
ஸ்ரீ விலக்ஷணானந்த விலாசம்
பி.கே. நாராயணன் & கோ.,
புரோப்ரைட்டர்

இஃது 1925 மறு பதிப்பு

ஓம் தத் ஸத்

தேவார நகரம் சுத்தாத்வைதி அருட்கவி

**ஸ்ரீ விலக்ஷணானந்த சுவாமிகள்** அருளிச் செய்த

# ஹிந்து மத ஸ்தாபனம்

(இ∴து 1925 பிரதியின் மறுபதிப்பு)

## பொது

அமெரிக்கா நாட்டுப் பாதிரிகள் அடியோடிந்தியாவிலுள
நமது மதத்தைக் கிருஸ்தவமாய் நாட்டப் போகின்றார்க ளதை
இமையளவுந்தானிற்காம லேகிவிடவுநமதுமத
முமையொரபாகனருளாலே யோங்கிவளரவுன்னுவமே. 1

இந்தியாமுழுதுமீச னித்துமாமதத்தைப்போதித்
தந்தமாமேற்குநாட்டா ரஞ்சிடச்செய்துவைப்பாம்
பந்தமாமதத்திலாழ்ந்து பருகிடுமறிவிலோர்க்குச்
சொந்தமாம் புத்தியேது சொல்லுவீர் சகத்தினோரே. 2

இடமும்பொருளுமேவலுட னினிதாய்க்கொண்டுஇந்தியரை
அடமேயாகக்ருஸ்தவத்தி லாக்கவேண்டி அமெரிக்கர்
திடமேகொண்டுவருகின்றார் தேவேநினக்குத்தெரியாதோ
கடமைஎதுவோ வதைச்செய்வாய் கண்ணாலொழுகுங் கண்ணீரே.
3

மதமேநமக்கு ஆதாரம் மதத்தைவிட்டார்கதியிலையே
அதையேதொலைக்கவருகின்றார் அமணர்போலவன்னோர்கள்
சிதையாவண்ணஞ் செய்திடுவாய் தேவேதெய்வ நடத்தரசே
நிதமே நினக்கு ஆளாவோம் நேயங்கடந்த நித்தியத்தே. 4

உடைகோவண முண்ணிலையு முறங்காபொருளுந் துணைகொண்டு
நடையே துரியநளினநிலை நனவிற் சுழுத்தி நாட்டமதாய்
இடையில்வந்த இவ்வுலக மெனக்கு வேண்டா மென்றிருந்தால்
தடையாய் வந்துதான் முழைக்கத் தானென் செய்வேன் றற்பரனே.
5

## திருஞான சம்பந்தர்

மேற்கு நாட்டுப்பாதிரிகள் மேலே யெழுந்து நம்மதத்தை
யேற்கச் செய்யப்போகின்றா ரென்னே செய்வா ரிந்தியர்கள்
சேர்க்கையில்லாப் பெருமானே சீகாழிக்கே யுடையானே
மார்க்கங் காட்டவருவாய்நீ மன்றுண்டனமிடு மரசே. 6

## மணிவாசகப் பெருமான்

புத்தரை வாதில்வென்ற புண்ணியா நினக்குச் சொல்வேன்
எத்தனை நாளாயிந்த இந்தியர்படுவோர் கஷ்டம்
சத்தியம்நீயே வந்து சார்ந்திடிற் பறக்குமென்றே
நித்தியந் தியானஞ்செய்ய நேர்பட வருள்செய்வாயே. 7

## ஸ்ரீ கண்ணபிரான்

புல்லாங்குழலை யுறவூதிப் புவியிற் பிறந்த மணிவண்ணா
எல்லாநாடுஞ் செழித்திருக்க இந்தியா தானிக்கோலம்
பொல்லாவினையோ புகழிலையோ பூர்வினையோ வென்னெயோ
சொல்லாயெனக்கு வுள்ளுளவை சொன்னாலறிந்து கொள்வேனே.
8

## இராமானுஜர்

வடநாடதனிற் புத்தர்தம்மை வலியால்வென்ற வுடையவரே
மடமேகொண்டு நம்மையெல்லா மயக்கிவிடவே வருவாராம்
இடமேதென்று போதித்து எங்கும்பரவச் செய்திடுவோம்
கடிமாமலர் சூழ்கற்பகத்தான் காட்சிகொடுக்குங் கதிர்மலையே.
9

## சங்கரர்

புத்தர்கள் சமணர் தம்மைப் போரிலே வென்றதீரா
இத்தனைநாட்களாயும் எங்குநீ யொழித்தாய் கொல்லோ
சத்தியம்வந்தே தீர்ந்து சாதிப்பாய் சங்கராநின்
பத்தியேகுடி கொண்டிந்தப் பாரத நாட்டிலம்மா. 10

பிரசாரகஞ் செய்வதற்கு நிச்சயித்து ஹிந்து மத விஷயம் நன்றாகத் தெரிந்தவர்களும், தைரியமுடையவர்களும் போதனா சக்தி உள்ளவர்களும் ஆகச் சுமார் நூறு பெயர் சன்னியாசி களும், கிரகஸ்தர்களுமாகத் தயார் செய்யப்பட்டு வருகிறது. அதற்கு வேண்டிய மற்றச் சகாயங்களும் தயாரித்து இருக் கின்றன. கூடிய சீக்கிரம் முன்னாடியே துண்டுப் பிரசுரங்களை முன் சொன்ன எல்லைக்குள் பரப்பிவிடப் போகிறார்கள். கடைசியில் லக்ஷக்கணக்கான புஸ்தகங்களும் வெளிப்புறப்பட போகின்றன. 1921ஆம் வருஷம் முதலாக நூறு பிரசாரகர்களும் பாகஞ் செய்து அவரவர்கள் எல்லைக்குள் போதிதிப்பதற்குப் புறப்படுவார்கள். அதற்குள் முன்னறிக்கை எல்லோருக்கும் புலப்படும்படியாகத் துண்டுப் பரசுரங்கள் புஸ்தகங்கள் மூலமாயும் பத்திரிகைகளின் மூலமாயும் பகிரங்கப்படும்படி செய்துவிடுவார்கள். அப்பால் கடைசியில் முறையாக எல்லை கட்டினவரையுள்ள இடங்களில் முக்கியமான இடங்களில் முக்கியமான இடங்களுக்கு அநேக கூட்டத்துடன் சென்று குறித்த நாளைக்குள் பிரசாரக வேலைகளை முடித்துவிட்டுத் திரும்புவோம்.

## தீரம்

ஹிந்துமதத்திற்கு எதிரியாய்த் தோன்றி மத விஷயத்தில் போதிக்க வரப்போகிற அமெரிக்க நாட்டுப் பாதிரிமார்களை இந்தியாவிற்கு வரவொட்டாமல் தடுக்க நம்மிடத்தில் அதிகார மல்லாதது விசனிக்கத்தக்கது. ஆயின் மைசூர், திருவாங்கூர், பரோடா, நைஸாம் முதலிய சுதேச அரசர்கள் தமது இராஜ்யத் திற்குள் வராது தடுக்கலாம். இந்த விஷயத்தைப் பொறுத்த தாகையால் அதைப்பற்றி ஒவ்வொரு இந்தியனும் அதிக முயற்சி எடுத்துக் கொள்ள வேண்டியது. அவசியமென்று ஏற்படுகிறது. மதத்தை பறிகொடுத்துவிட்டு நாமிருந்தென்ன போயென்ன. பாரதநாட்டிலுள்ள எல்லோருடைய இருதயங்

களிலும் உறங்கிக் கிடக்கிற ஆத்மசக்தியைப் பிரயத்தனத்தால் எழுப்பிவிட வேண்டும். எங்கு பார்த்தாலும் மதவுணர்ச்சி தோன்றும்படி செய்ய வேண்டும். எது நழுவினாலும் மதம் மட்டும் தீரமாயிருக்க வேண்டும். மத விஷயங்களிற் பரவேசித்து வேலை செய்கிற நாம் திடீரென்று ராஜீய விஷயங்களில் தலையிடக் கூடாது. நமக்கு நமது ஹிந்து மதம் நிலைக்க வேண்டிய உத்தேசத்தைத் தவிர ராஜாங்கத்தைப் பற்றி யாதொரு கவலையுமில்லை. மதத்தையும் அதிகாரத்தையும் பிரிக்க முடியாது என்று ஸ்வாமி ராமதீர்த்தர் சொல்லியிருக் கிறார். இதுவரை ஹிந்துக்கள் 3 கோடி பேர்கள் கிருஸ்தவ மதத்திற் சேர்ந்து விட்டார்கள். முகம்மதியர்கள் ஒருவராவது அந்த மதத்திற்குப் போனதாக இதுவரை இல்லை. இதை நோக்கும்போது முகம்மதியர்களுக்குள்ள மதக்கட்டுப்பாடு நமது மதத்திற்கு காணாதென்றே நினைக்க வேண்டியிருக்கிறது. முன் காலத்தில் நமது நாடு எல்லா விஷயத்திலும் மேம்பட்டிருந்த தென்று இப்போது கூறிற் பிரயோஜனமில்லை. ஆதிகால விசயங்களெல்லாம் சொற்பனமாகக் கருதவேண்டிய காலம் வந்துவிட்டது. ஆசாரங்கள் பலபலவிதமாய் மாறிவிட்டன. எதார்த்தம் தத்தளிக்கிறது. கடமை என்பது எல்லையிற் காணோம். ஆதி காலங்களில் அன்னிய சமுத்திர மத்தியி லிருந்து ராக்ஷதர்கள் வந்து இந்தியாவிலுள்ள ஸ்திரீகள் செல்வம் இவைகளைக் கொள்ளையடித்துப் போனதாகச் சரித்திர மூலமாகக் கேட்டிருக்கிறோம். அதுபோல சமுத்திரத் தீவிலுள்ள மேற்கு நாட்டார்கள் என்ற ராக்ஷதர்கள் இதுவரை மதத்தைக் கொள்ளை கொண்டனர். மற்றுமிருப்பதையும் கொண்டு போக வருகின்றார்களாம். இதைப் பார்க்கும்போது ஓர் தேஜோமயத் திவ்விய புருஷனை நம் நாடு எதிர்பார்க்குங் காலமாயிருக்கிறது. இனி நாம் முக்கியமாய் அனுஷ்டிக்க வேண்டிய முறைகளை எதார்த்தமாக்க கூறவாரம்பம்.

# இதோபதேசம்

எல்லோரையும் சமமாகக் கருதுங்கள். ஹிந்து மதத்தைக் காட்டிலும் மேலான மதம் ஒன்றிருக்கிறதாக எண்ணாதீர்கள். ஜனன மரணத்தை யொழிக்க வேண்டிய பகவானை விரும்பி அடையுங்கள். ஈஸ்வர 'பக்தி செய்யுங்கள். சுத்தமான செய்கை, நினைப்பு, ஆகாரம் இவைகளை உபயோகியுங்கள். மதப் பேயை விட்டொழியுங்கள். அமெரிக்க நாட்டுப் பாதிரிகள் செய்யப் போகிற கிருஸ்தவ மதப் பிரசாரகத்தில் மயங்கி விடாதீர்கள். பலருக்கும் இதைப்பற்றிப் போதித்து உறுதிப் படுத்தி வையுங்கள். நீங்கள் யாவருமொன்றாயிருங்கள். ஏசுநாதரை மஹானாயெண்ணுங்கள். வருகிற அமெரிக்கா நாட்டுப் பாதிரிமார்களை தூஷிக்காதீர்கள். அவர்கள் போதனைக்கு மட்டுமாளாகதீர்கள். கிருஸ்துவ மதத்தைக் கண்ணியமாகக் கருதுங்கள். இந்துமத இஸ்லாமத ஒற்றுமையைப் பலப்படுத்துங்கள். ஒருவருக்கும் விரோதமான காரியத்தைச் செய்யவும் நினைக்கவுந் துணியாதீர்கள். உபதேச மொழிகள் ஜீவனுக்கென்றெண்ணுங்கள். ஞானமடையு மிச்சையைத் திடமாய்க் கொள்ளுங்கள். ஆதிகால வழக்கங் களை ஞாபகத்துக்குக் கொண்டு வந்து அனுஷ்டானத்தில் காண்பியுங்கள். தற்கால நாகரீக வழக்கங்களைச் சிறிது சிறிதாகவிட முயலுங்கள். ராஜ துவேஷமான காரியங்களில் தலையிடாதீர்கள். யாரையுந் தாழ்வாக நினையாதீர்கள். ஹிந்து மத ஸ்தாபனத்தின் பொருட்டு உடல், பொருள், ஆவியைக் கொடுக்கத் தயாராயிருங்கள். எப்போதும் யாரிடத்திலும் மத விரோதம் பாராட்டாதீர்கள். வெகு தீரமான மனத்துடனிருங்கள். உடம்பு திடீரென்று விழும்வரை மதாபிமானகளாகவே இருங்கள். சரீரத்தைத் துண்டு துண்டாக வெட்டினாலும் அசையாதீர்கள். நாஸ்திகரையும் தூஷிக்காதீர்கள். பாரத மாதாவைப் பந்தத்தினின்று விடுபடுத்தவாரம்பியுங்கள். பாரத தேவிக்கு ஆலயஞ் செய்து ஆராதியுங்கள். உள்ளும் புறமும்

சுத்தமாயிருங்கள். மேற்கு நாட்டு நாகரீகத்திற்கு விலகி யிருங்கள். எல்லாச் சுதந்தரத்தையும் பகவானிடம் விட்டு விடுங்கள். உங்களுக்குத் தக்கவாறு நன்மை செய்யுங்கள். அடியார்களுடன் பயபக்தியுடனிருங்கள். ஹிந்துக்களது பெருமையைப் பரவச் செய்யுங்கள். அன்னிய மதபோதனை களை நமது மதக்கோட்டைக்குள் நுழையாதீர்கள். கூடிய சீக்கிரம் ஒர் அவதார புருஷர் வருவாரென்பதை நிச்சயமாக நம்புங்கள். ராஜாங்கத்தாரைப் பெருமைப்படுத்தியே பேசுங்கள். வைதீகர்களைக் கண்டு தெரிசனம் செய்யுங்கள். அசட்டு வழக்கங்களையும் பயத்தையும் விட்டொழியுங்கள். ஏற்றத்தை யும் இரக்கத்தையும் எண்ணி வருந்தாதீர்கள். ஞானப்பேச்சை வாயில் மட்டும் பேசாமல் அனுபவத்துக்கும் கொண்டுவர முயலுங்கள். ஹிந்து வகுப்பார்களில் யாரையும் பேதம் பாராமல் எல்லா விஷயத்திலும் சரியாய் நடத்துங்கள். ஹிந்து மத அகண்ட நோக்கத்துடனிருங்கள். குறுகின மத நோக்கங் களை அடியோடு விட்டுவிடுங்கள். உள்ளதை உள்ளவாறு மத விஷயத்தில் மட்டும் உபயோகியுங்கள். உலக விஷயங்களில் கபடமில்லாமல் வெல்ல முடியாதென்பதை நம்புங்கள். அதற்குச் சாக்ஷி கபடநாடகக் கண்ணபிரானே என்று கருதுங்கள். அவரவர்கள் சுதந்தரக் கடமையயை விடாதீர்கள். ஒவ்வொருவர் களுக்கும் மேலானவர் கடவுளென்றே எண்ணுங்கள். கட வுளுக்கு மேலான வஸ்து ஒன்றுமில்லையென்றெண்ணுங்கள்.

## முடிவு

இப்புஸ்தகத்தை முழுதும் படித்துப் பார்த்தவனுக்கு ஓர்வித மதவுணர்ச்சி புதிதாக உண்டாகுமென்பதிற் சந்தேகமே இல்லை. இதைப்படித்தவர்கள் இந்தப் புஸ்தகத்திலுள்ள விஷயங்களை நமது மத ஜனங்களக்குப் போதிக்க வேண்டும். அச்சிட்டுப் பரவச் செய்ய சக்தியுள்ளவர்கள் புஸ்தகத்தின் ஆசாரியரின் அனுமதியின்றி அச்சிடலாம். ஒவ்வொரு

கிராமங்களிலுஞ் சென்று தாழ்ந்த ஜாதியர்களுக்கு மத விஷயத்தை நன்றாக போதிக்க வேண்டும். தங்களால் ஆனவரை நமது மத்திற்கு உழைக்க வேண்டும். அமெரிக்க நாட்டுப் பாதிரிகள் வந்து செய்யப் போகிற கிருஸ்தவ மதப்பிரசார வேலைகளில் இந்தியர்கள் மயங்காதிருக்கும்படி வேண்டிய பல முயற்சிகள் அப்போதைக்கப்போது செய்ய வேண்டுமென்பதை அறிவுறுத்த வேண்டும். இதைப்பற்றி ஒவ்வொரு ஹிந்தியனும் பலமாய் முயற்சி செய்ய வேண்டும். ஹிந்துமத விருத்தியின் பொருட்டு நற்காலம் பிறந்துவிட்ட தென்பதற்கு யாதொரு சந்தேகமும் இல்லை. ஓர் நன்மை உதயமாகுமுன் தீமையுதிப்பது வழக்கம். ஒளி உதயமாகுமுன் இருள் உதயமாவது ஸகஜம், அதுபோல நமது மதத்தின் பெரிய நன்மை வருமுன் முற்கூறிய தீமை உதயமாகப் போகிறது நன்மையே. சர்வ புவன ரக்ஷக ஈஸ்வரன் நமது முயற்சிகளுக்கு யாதொரு இடையூறும் வராமல் அருள் பாலிப்பாராக.

ஓம் தத் ஸத்

ஓம்
தத் ஸத்

சுத்தாத்வைதி

அருட்கவி

ஸ்ரீ விலக்ஷணானந்த ஸ்வாமிகள்

திருவாய் மலர்ந்தருளிய

# அந்தர் தியானம்

இஃது

கும்பகோணம்

எ, தங்கவேல் என்னும் ஓர் அன்பரால்

பதிப்பிக்கப்பட்டது.

1921 பதிப்பின் மறு பதிப்பு

ஓம் தத் ஸத்

சுத்தாத்வைதி அருட்கவி ஸ்ரீ விலக்ஷணானந்த ஸ்வாமிகள்
திருவாய் மலர்ந்தருளிய

# அந்தர் தியானம்

1. மனுச் சக்கிரவர்த்தி கால முதல் இதுவரை இந்தியாவில் லக்ஷக்கணக்கான பல மாறுதல்கள் ஏற்பட்டன.

2. தற்போது ஏற்பட்டிருக்கிற பெரிய மாறுதல் போல முற் காலத்திலும் இரண்டொரு தடவைக்கு மேல் ஏற்பட்டதில்லை.

3. ஈஸ்வர நியதியின் காரணத்தாலேயே இவ்வித மாறுதல்கள் உலக முழுமையும் எற்பட்டிருக்கின்றன.

4. தற்சமயம் ஏற்பட்டிருக்கிற மாறுதல்களிலும் குறைந்த மாறுதல் உண்டான காலத்திற்கே ஸ்ரீராமாவதாரம், ஸ்ரீ கிருஷ்ணாவதாரம் ஏற்படடிருந்ததானால் இப்போது அதைக் காட்டிலும் ஓர் பெரிய அவதார புருஷர் வரவேண்டும்.

5. பரமார்த்திக உண்மைப்படி யதார்த்தத்தை நான் சொல்லிக் கொண்டு போகும் போது வியாவகாரிக மனுஷ்யர் களுக்கு விளையாட்டாகப்படலாம்.

6. இப்போது ஏற்பட்டிருக்கிற மாறுதல்கள் வரவர அதிகமாகிச் சிலகாலம் இருந்தே தீரும்.

7. ஸ்ரீ கண்ணபிரான் அர்ஜுனனுக்குக் குருக்ஷேத்திர பூமியில் கூறிய சத்தியவாக்குறுதி நிறைவேறுங் காலம் நெருங்கி விடடது.

8. கட்டுப்பாட்டோடிருந்த இந்தியா கட்டுக் குலைய ஆரம்பித்து விட்டன.

9. தற்கால ஹிந்துக்களுக்குத் தமது மத சாஸ்திரங்களின் உணர்ச்சி மனதில் பதிவது கடினமாகி விட்டது.

10. மனம் பதறவதற்கு ஏதுவான பல காரணங்கள் இக்காலத்தில் எங்கு பார்த்தாலும் ஏற்பட்டு விட்டன.

11. மனம் பதற ஆரம்பமாகிப் பிராணன் பதறி இந்திரியம் நடுங்கி உடல் பதறி அதனால் பல கெடுதல்கள் உண்டாகிற காலமாய் விட்டன.

12. வெளி விஷய மயக்கமான வஸ்துக்கள் பாரத நாட்டில் எல்லா இடங்களிலும் பரவி விட்டன.

13. கற்பின் செல்வமாகிய நமது நாடு கற்பின் மூலமே நிலைகுலைந்திருந்தது.

14. மற்றொரு தேசத்தின் ஆசாரத்தை இந்தியாவில் நாட்டியதுதான் இவ்வளவு தீமைக்கும் காரணம்.

15. எந்தெந்த தேசம், எந்தெந்தப்படி, ஆதியில அமைத்து ஆண்டு வரப்பட்டதோ அதை மாற்ற ஆரம்பித்தால் பல தீமை உண்டாகி விடும்.

16. ஞானம், பக்தி, கருமம், யோகம், உண்மை, கற்பு, ஆசாரம், புண்ணியம், ஜீவகாருண்யம் இவைகளுக்கு இக்காலத்தில் ஏளனமும் குறைவும் ஏற்பட்டு விட்டன.

17. இந்தியாவலுள்ள ஸ்திரீ புருஷர் கட்டு மீறிவிட்டது நாட்டின் தீமைகளைக் குறிக்கிறது.

18. ஒழுங்குள்ள ஸ்திரீ புமான்களைக் காண்பது அறிதாய் விட்டன.

19. இந்திரிய ரேதஸ் பலம் குறையப்படுவதற்கு ஏதுவான பல காரணங்கள் இந்தியாவிலும் முளைத்து விட்டன.

20. பலவீனமுள்ள புத்திரர்களே இப்போது பிறக்கிறார்கள்.

21. ஹிந்துமத வேதங்கள் வேத புருஷனிடத்து முறையிடப் போய்விட்டன.

22. ஞானாராய்ச்சி, மதாராய்ச்சி இவைகள் குறைந்ததின் பயனாக இந்தியாவில் நாஸ்திகத் தன்மை பருத்து விட்டன.

23. வருணாச்சிரம தரும வைதீக மார்க்கங்களுக்கு விரோதமான பல குட்டி மதங்கள் இந்தியாவிலேயே முளைத்து விட்டன.

24. இக்காலத்தே ஏற்பட்ட பிரபல ஞானிகளுங் கூட முற்கால மதஸ்தாபன ஞானிகளை குறைகூற ஆரம்பித்து விட்டார்கள்.

25. இப்போது இருக்கிற புலவர்கள் பகவான் அருள் பெற்ற முற்கால புராணசாரியர்களையே குற்றம் கூறுகிறார்கள்.

26. இந்தியாவின் கேடு காலத்தின் பயனாக பழைய ஞான நாகரீகங்களெல்லாம் மனிதர்களுக்கு விபரீதமாய்ப்படு கின்றன.

27. மத விஷயமே தெரியாத லௌகீக மயக்கமுடைய வர்களே ஜனத் தலைவர்களாய் விட்டார்கள்.

28. வேதாந்த ஈஸ்வர ஞான சமுத்திரத்திலேயே மூழ்கின இந்தியாவாதலால் மற்ற கண்டத்தார்கள் நாகரீகம் பதிவது கடினமாயிருக்கிறது.

29. பாவனா மாத்திரமாக மதானுஷ்டானங்களெல்லாம் ஆய்விட்டன.

30. மேற்கு நாட்டு ஆசாரம் இந்தியாவில் பூரா நுழையு மானால் இந்த நாடு நசிந்து விடும்.

31. முதலில் நமக்கு நன்மைபோல் தோற்றுகிற மேற்கு நாட்டு வழக்கங்கள் பின் தீமையே விளைவித்துவிடும்.

32. ஆதிகால மதஸ்தாபனவுறுதிகளெல்லாம் மறைந்து கிடைக்கின்றன.

33. இந்தியாவின் இயற்கையான ஆசாரம், கல்வி, தேசம், மதம், குணம், நன்மை, தோற்றம், ஆகாரம் இவைக்ள மாறிவிட்டன.

34. பழைய இந்திய நாட்டு வழக்கங்களை முன்னுக்குக் கொண்டு வந்தால் இந்தியா க்ஷேமம் அடையும்.

35. ஹிந்து மதஸ்தர்களில் மேற் கீழ் ஜாதிபேதம் பார்த்தால் தேசத்தின் தீமைக்கு காரணமாயிருக்கிறது.

36. ஹிந்துக்களுக்கு உயிரைக் காட்டிலும் மதமே பெரிது.

37. ஒவ்வொருவர்களும் தமது கடமைகளைச் செய்யத் தவறியதால் இந்தியா க்ஷீண தசையிலிருக்கிறது.

38. தாழ்ந்த ஜாதியர்களுக்கு அதிகமான கல்வி, மதிப்பு இவைகளை கொடுபடல் வேண்டும்.

39. ஆங்கிலேய ராஜாங்கச் சட்டங்கள் பார்வைக்கு அழகாகவும் ஒழுங்காவுமிருக்கின்றன.

40. பழைய பாரத நாடு போல் எல்லா விஷயத்திலும் இந்தியா ஆய்விட வேண்டும் என்று ஒவ்வொரு இந்தியனும் தன்னாலான வரை முயற்சி செய்ய வேண்டும்.

41. இன்ப வுதயத்தின் முன்பு துன்ப வுதயமாகிறது.

42. உலகம் மாறுதல் கொண்டாலொழிய மாறாத கடவுள் வடிவமான அவதார புருஷர் வரப்போகிறதில்லை.

43. எல்லா உலகங்களுக்கும் பொதுவாக ஓர் தெய்வீக புருஷர் வரப்போகிறார்.

44. உலகம் மாறுதல் அடையாதிருக்குமானால் கடவுளுக்கு குற்றமுண்டாகிறது.

45. மதத்திற்கும் ஹிந்துக்களுக்கும் மாறாத சம்பந்தமிருக்கிறது.

46. காலத்திற்குட்பட்டு காலத்தை எதிர்பார்த்துக் கொண்டு பல மஹான்கள் மூலைகளில் பதுங்கியிருக்கிறார்கள்.

47. எந்தெந்தக் காலங்களில் எதெது நடந்து தீரவேண்டுமோ அது யார் தடுத்தாலும் நடந்தே தீரும்.

48. இந்தியாவில் மத விஷயமான மாறுதலும் சிலநாளைக் குள் உண்டாகப் போகிறது.

49. மத விஷயமான நஷ்டமுண்டாகிற போதுதான் அவதார புருஷர் வருவார்.

50. மாறிமாறி வருவதனால்தான் உலகமென்று பெயர். மாறாதிருந்தால் பிரஹ்மமென்றே சொல்லிவிடலாம்.

51. கடவுளை அடைவதற்கு ஏதுவாயிருககிற மதாந்தர வுணர்ச்சியைவிட உலக விஷய போகத்தை நினைக் கிறவன் மனிதனல்ல.

52. கடவுள் மனுஷ்யனை யெதற்காகப் படைத்தார் என்பதை உண்மையாகத் தெரிந்து கொள்ள வேண்டும்.

53. கலப்பில்லாதிருந்த இந்தியா பல கலப்புள்ளதாய்ப் போய்விட்டது.

54. இந்தியாவின் உண்மைக் கல்வியைப் பிள்ளைகளுக்குப் போதிப்பதே தகுதி.

55. இந்தியாவின் க்ஷேம விஷயமாய் இராஜாங்கத் தலைவர்களிடம் சரண்புகுவதைவிட பகவானிடம் சரண் புகுவது சிலாக்கியம்.

56. புத்தியிலிருந்து வெளியே தலையை நீட்டுகிற அழகான க்ஷத்திரிய சர்ப்பங்களை மண்டையிலடித்துவிட வேடர்கள் தயாராயிருக்கிறார்கள்.

57. பகிர்முக மயக்கமான பண்டங்கள் இந்தியாவில் எங்கே பார்த்தாலும் குறைந்து விட்டன.

58. வெளிவேஷ மயமாயிருக்கிற நாடுகளெல்லாம் சிறிது காலத்தில் இந்தியாவிற்கு அடிமையாகப் போகிறது.

59. மயக்கத்தில் ஆழ்ந்தினவர்களையே இக்காலத்தில் மஹானாகக் கருதப்படுகிறது.

60. பத்திரிகைகளெல்லாம் துவேஷ மயமாய் நிற்கின்றன.

61. உலகம் மாறுதல் அடைகிறபோது மாறாத ஜனத் தலைவர்கள் வருகிறார்கள்.

62. இந்தியா முழுவதிற்கும் சம்ஸ்ருதம் பொது பாஷையாக வும் ஒவ்வொரு நாடுகளுக்கும் ஒவ்வொரு சொந்த பாஷையையும் ஏற்படுத்த வேண்டும்.

63. அந்தந்த தேசங்களில் அந்தந்த பாஷைகளை விருத்தி செய்வதே தேசத்தின் க்ஷேமமாகும்.

64. ஆங்கில பாஷை இந்தியாவில் பரவப் பரவத் தீமையைத் தவிர நன்மை உண்டாகப் போகிறதேயில்லை.

65. கலப்பில்லாத இந்தியா வரப்போகிறதென்பது நிச்சயம்.

66. இந்தியாவிற்கு சுயராஜ்யங் கிடைத்தாலும் உள்நாட்டுக் கலகங்களும் மனோசஞ்சலக் குரோதங்களும் போகவே மாட்டாது.

67. சுயராஜ்யத்திற்க மேலான ராஜ்யம் கிடைப்பதே இந்தியா க்ஷேமமடையும் கருவி.

68. இந்தியா முழுவதும் ராகத் துவேஷமின்றி சகோதர பாவமாய் அமைதியுடனிருக்க வேண்டுமானால் பழைய கால ஆத்ம பிரஹ்ம ஞான போதனை பரவ வேண்டும்.

69. ஒன்றும் தெரியாமற் பேசுகிறவர்களெல்லாம் தேசத் தலைவர்களாய் விடுங்காலமாய் விட்டது.

70. சரீர பலம், இந்திரிய பலம், மனோ பலம், பிராண பலம், ஆத்ம பலம், ஞான பலம், உலக பலம், வித்யா பலம் இவைகள் கெடும்படியான படிப்பு, ஆகாரம், நடை, வுடை, சேர்க்கை இவைகள் அன்னிய தேசங்களால் இந்தியாவில் உண்டாகி விட்டன.

71. எந்தெந்த வஸ்துக்களை நமது சாஸ்திரம் தள்ளச் சொல்லுகிறதோ அதையெல்லாம் தற்கால சாஸ்திரம் சேர்க்கச் சொல்லுகிறது.

72. ஒவ்வொரு ஹிந்திய சகோத சகோதரிகளும் ஹிந்து மதத்தின் சம்பூர்ண க்ஷேம லாபங்களை உத்தேசித்துக் கடவுளை தியானித்து வரவேண்டும்.

73. கடவுளால் ஏற்படுத்தி இருக்கக் கூடிய வேதத்தின் ஆக்ஞையை மீறாதபடி நடப்பதை அனுஷ்டானத்தில் காட்டக் கூடிய ஆசார்யர்கள் பலர் இப்போது இந்தியா விற்கு வேண்டும்.

74. வேதம், ஆகமம், ஸ்மிருதி, புராணம், இதிகாசம் முதலிய சாஸ்திரங்களெல்லாம் மூலைகளிற் கிடக்கின்றன.

75. இந்தியாவிலுள்ள ஆத்மப் பிரகாசம் மாறி அதற்கெதிரிடையான பல பிரகாசங்கள் குவிந்து கொண்டன.

76. குருட்டு இந்தியர்களுக்கு குருட்டு ஆசார்யர்கள் மேற்கு நாட்டினின்று வந்து போதிக்கிறார்கள்.

77. பஞ்சமர்களுக்கும் பெண்களுக்கும் ஹிந்து மதக் கல்வி போதிக்க வேண்டும்.

78. கூடிய காலத்தில் தலைவர்களெல்லாம் பதுங்கிவிடப் போகிறார்கள்.

79. பலர் மனோசக்தி பதிந்த இடத்தில் கடவுள் சக்தி வெளிப்படுகிறது.

80. எதார்த்த ஹிந்துமத ஞானியாகவும் லௌகீக விஷயத்தில் தீரசாமர்த்தியமுடையவர்கள் மாத்திரம் முன்னேற்ற மடைவார்கள்.

81. கெடுதல்கள் பல உண்டாவதே பெருத்த நன்மைக்கு ஆதாரம்.

82. மனப்பூர்வகமான இராஜாங்கத்தை ஜனங்கள் ஒப்புக் கொள்ளுவார்கள்.

83. இந்தியாவில் இந்து ராஜாங்கமாக எக்காலத்திலும் குடியரசு ஸ்தாபிக்கப்படவில்லை.

84. பிற்காலத்திய பௌத்த மத காலத்தில் மட்டும் சில காலம் குடியரசாகவே இருந்தது.

85. மாறாத இந்தியாவைக் கண்டவன்தான் மாறுகிற இந்தியாவை அடக்கி நடத்துவான்.

86. ஈஸ்வராம்சமுடைய எந்த ராஜாங்கத்தையும் மனதாரத் தூஷித்தல் பாபமென்று சாஸ்திரம் கூறுகிறது.

87. அசோகன் காலத்திலேயே இந்துமதத்திற்குப் பலம் குறைய ஆரம்பித்துவிட்டது.

88. தான் மாத்திரம் சுத்தமாய் விடடால் உலகமே சுத்தமாகி விடும்.

89. சன்னியாசிகளே இந்து தேசமும் மதமும் க்ஷேமமடை வதற்கு காரணமாயிருக்கிறது.

90. நமது இந்தியாவில் ஆதியிலிருந்து சில நூற்றாண்டுகள் வரை இந்தியாவை 60 பாகமாகப் பகுத்து ஒவ்வொரு மண்டலங்களுக்கும் ஒவ்வொரு அரசன் ஏற்படுத்தி யிருந்ததினால் குடிகள் நேரே அரசனிடம் தமது குறைகளைக் கூறிக் கொள்ள ஏதுவாகயிருந்தது.

91. ஆதியில் இந்திய ராஜாங்க காலங்களில் சன்னியாச தர்ம பரிபாலன சட்டம் என்று ஒன்று ஏற்பட்டிருந்தது.

92. சன்னியாச தர்ம பரிபாலன டிபார்ட்மெண்டு இல்லாத இக்காலத்திலேயே ஒரு கோடி முப்பது லக்ஷம் சன்னியாசிகள் இருக்கிறார்களாம்.

93. விளக்கின் மயக்கத்தில் விட்டிற் பூச்சி விழுந்து மடிகிறது போல இந்தியர்கள் மேற்கு நாட்டு மயக்கங்களில் வீழ்ந்து விட்டார்கள்.

94. பிராமண சூத்திர பேதம் பார்த்தல் தேச நன்மைக்குத் தீமை விளைப்பதோடு ஆத்ம ஞான சம்பிரதாயமும் அப்படி சொல்லவில்லை.

95. ஒவ்வொருவனும் யதார்த்த இந்தியனாக முயற்சி செய்து வர வேண்டும்.

96. மாதா, பிதா, குரு தெய்வம், பசு, பிராமணர், தேவர், நவக்கிரகங்கள் இவற்றின் பக்தியே தேச க்ஷேமத்திற்கு ஏது.

97. ஆதி இந்தியாவின் தன்மையை நினைக்கும்போது மனது மயிர்க் கூச்சலெடுக்கிறது.

98. சன்னியாசிகள், தபசிகள், நிஷ்டாபரர்கள், யோகிகள், மஹான்கள் இவர்களுக்காக எற்படுத்தப்பட்ட ஆரண்யங்கள், ஆஸ்ரமங்கள் இவைகளெல்லாம் பாழாக் கிடைக்கின்றன.

99. கால வித்தியாசம் முதிர முதிரக் கடவுள் கண் திறந்து பார்க்கிறார்.

100. உலகமெங்கும் சுற்றிப் பார்த்தாலும் மோக்ஷமடைவதற்கு வேண்டிய உபகாரமான சான்னித்திய சாதன வஸ்துக்கள் இந்தியாவைப்போல் மற்றெங்குமில்லை.

101. தன் காரியம் பார்க்காமல் இராஜ காரியம் பார்க்கிற தலைவர்கள் இரண்டொருவரைத் தவிரக் குவிந்து விட்டடார்கள்.

102. ஆசார்யர்கள் தன் கடமையைச் செலுத்தத் தவறியதால் சிஷ்யர்கள் ஒழுங்கு தவறி நடக்கிறார்கள்.

103. புருஷன் தன் கடமையை செலுத்த மறந்து விட்டதால் ஸ்திரீகள் சுதந்தர வாதிகளாய்த் திரிகிறார்கள்

104. சுதந்தர வாதம் கடவுள் ஒருவருக்கன்றி மற்றையருக்கில்லை.

105. பிதா தன் கடமைகளை மறந்து விட்டதால் புத்திரன் தன் உடைமையை மறந்து திரிகிறான்.

106. கடமை கொண்ட இராஜாங்கமானால் ஜனங்கள் தப்பான வழியிற் செல்ல மாட்டார்கள்.

107. மற்ற ஒவ்வொரு நாடுகளெல்லாம் பல மிருகங்களாகவும் இந்தியாவைப் பசுவாகவும் ஒப்பிடலாம்.

108. இயற்கைக்கு விரோதமான காரியங்களில் பிரவேசிக்கும் போது இந்தியா தத்தளிக்கிறது.

109. பற்றற்றவர்களைக் கொண்டே இந்தியா ஆளப்பட்டு வந்தது. அப்படியே ஆளப்பட வேண்டும்.

110. லோகாயதர்களின் அடிமை ஸ்தானத்தினின்று இந்தியா நீக்கப்பட வேண்டும்.

111. தலைக்குத் தட்டுகிற மரத்தை வைத்திருந்தால் தனக்கே அபாயம் நேரிடும்.

112. மதத்தில் இருக்கும் இராஜாங்கமே பலகால மதங்களிலும் இப்போதும் ஆதாரமாகவே இருக்கிறது.

113. சரீரமே தானென்று அதைச் சிங்காரிப்பவர்கள் இந்தியாவிற்கு வந்து இந்தியாவும் அப்படியே நடக்கத் தலைப்பட்டன.

114. இந்தியாவின் முற்காலத்திலுள்ள வைபவங்களை நினைத்துவிட்டு இப்போதுள்ளவைகளையும் நினைத்தால் திடீரென்று வயிறு பற்றி எறிகிறது.

115. ஆத்ம ஞானத்திற் கேதுவாகிய இந்தியாவை ஆனாத்ம ஞான தேசத்தினின்று நீக்கப்படல் வேண்டும்.

116. தனிமையாகச் சஞ்சரிக்கிற சரபப் பக்ஷிபோல இந்தியா ஆய்விட வேண்டும்.

117. மதவிருத்திக்கு ஆரம்பித்து வேலை செய்தால் இராஜாங்கத்தில் வந்து முட்டுகிறது.

118. இராஜாங்க முட்டைத் தவறினால் கடவுளிடம் முட்ட வேண்டியதுதான்.

119. பேசத் தெரியாதவரக்ளக்குப் பிரசங்கம் செய்ய ஏற்பாடு செய்ததுபோல இந்தியாவிற்கு ஏற்பாடாயிருக்கிறது.

120. மனதிற்குத் தட்டுப்படாத ஞானத்தை தட்டும்படி செய்யக்கூடிய மஹத்துவமுள்ள இந்தியாவிற்கு ஒரு தட்டு விலைக்கு வந்திருக்கிறது.

121. தன்னை எல்லா விஷயங்களிலும் சீர்திருத்திக் கொண்டப் பின்புதான் அன்னியர்களுக்குத் தன் அனுபவத்தைப் போதிக்கப் புறப்பட வேண்டும்.

122. வேர்ப்பலா பழுத்தால் பூமி வெடித்து வெளியில் வாசனை தெரியுமாம். அது போல இந்தியப் பலாமரத்தின் பூமி வெடித்திருக்கிறது. வாசனை மட்டும் கிளம்பவில்லை.

123. மயக்கமுடைய வார்த்தைகளைக் கொண்டே மந்திரஞ் செபிக்க மற்றவர்கள் துணிந்து விட்டார்கள்.

124. மேலான இடங்களுக்குச் சென்றால் கீழான செய்கைகள் நடக்கின்றன.

125. பெரிய பட்டணங்களுக்கு போகப் போக ப்ராந்தி அதிகரிக்கிறது.

126. எச்சிலையைச் சுற்றிப் பேதமின்றி நாய்கள் தின்கின்றது. அதற்கு சமரச ஞானம் வரவில்லை.

127. கண்களின் இயற்கை ஒளியை கெடுத்துவிடக் கூடிய பல விளக்குகள் இந்தியாவில் நிறைந்து விட்டன.

128. உயிர்விடப் போகிற தருணத்தில் உண்மை ஞான போதனையும் சன்னியாசமும் கொடுக்கக் கூடிய ஆசார்யர்கள் இப்போது வலுத்துவிட்டார்கள்.

129. தான் யாரென்று நன்றாய்த் தெரிந்து கொண்டபின்புதான் அந்நியர்கள் யார் என்று கேட்க வேண்டும்.

130. எல்லா தேசங்களும் தங்கள் தங்கள் பலங் குறைவுபட்ட போது வழிக்கு வந்துவிடுவார்கள்.

131. பாபம் அதிகரித்து விட்டதால் கடவுளுக்குப் பொறுக் காமலே இந்த மஹா யுத்தமும் பல குழப்பங்களும் ஏற்பட்டன.

132. புண்ணியத்தின் மாதாவாகிய சித்த சுத்தியில்லாத புருஷர்களையும் ஸ்திரீகளையும் பாரத பூமி ஏற்றுக் கொள்ளுகிறதில்லை.

133. ஆத்ம ஞானத்திற்கு ஏதுவான இராஜாங்கத்தையே இந்துக்கள் நாடுவார்கள்.

134. அந்தரங்கக் காரியங்களில் அதிகமாகப் பிரவேசித்தலே இந்துக்களின் ஆதிப் பழக்கம்.

135. எப்போதும் எல்லா விஷயங்களிலும் தாழ்ந்த பாவனையுடனிருப்பதே இந்துக்களின் முடிவு.

136. பந்த மோக்ஷங்களுக்கு இராஜாங்கம் ஒரு விஷயத்தில் காரணமாயிருக்கிறது.

137. உண்மை ஞானத்தை உள்ளபடி உணரவேண்டுமானால் உண்மையான இந்தியாவை உள்ளே பார்க்க வேண்டும்.

138. ஐம்பது ரூபாயை வைத்துக் கொண்டு ஆகாய விமானம் வாங்குகிற முயற்சிபோல, ஸ்வேதவராக வர்ணத்தார் மனதில் நினைத்திருக்கிறார்கள்.

139. பேசுகிற ஊமையைக் கண்டுபிடிக்க வேண்டி இந்தியா வில் பலபேர் பல இடங்களில் தேடிக் கொண்டிருக் கிறார்கள்.

140. வாயைத் திறந்து கொண்டு வருவதையெல்லாம் அப்படியே விழுங்கி விடுகிற பெரிய சர்ப்பங்கள் லக்ஷக்கணக்காக இந்தியாவிற்கு வந்து விட்டன.

141. சூத்திரர்களையும், பஞ்சமர்களையும், ஸ்திரீகளையும் இகழுகிற கூட்டத்தார் இந்தியாவில் இருக்கும்வரை இந்நாடு க்ஷேமமடையாது.

142. சன்னியாசிகளாலும் சூத்திரர்களாலும் இந்தியா முன்னுக்கு வரவேண்டுமென்று பல மஹான்கள் அபிப்பிராயம்.

143. ஆயிரம் வருஷங்களுக்கு முன் அவதாரமாகிய விசிஷ்டாத்வைத ஸ்தாபன இராமானுஜாசாரியார் தாழ்ந்த ஜாதியர்களை எல்லா விஷயத்திலும் கைதூக்கி விட்டிருக்கிறார்கள்; விடவேண்டுமென்கிறார்.

144. இப்போது இந்தியாயிருக்கிற நிலைமையைப்பற்றி யோசிக்கும்போது அழுத்தி எழுத முடியாது போலிருக்கிறது.

145. எப்போது உலக விஷய மயக்க சாதனங்கள் இந்தியாவை விட்டுப் போகுமோஅப்போதுதான் இந்நாடு முன்னேற்றமடையும்.

146. தற்போது முன்னேற்றமடைந்திருக்கிறதாகத் தோற்றப்பட்ட நாடுகளெல்லாம் கானற் ஜலம்போல் அன்றி வேறில்லை.

147. இந்தியா தேசம் எல்லா விஷயங்களிலும் முன்னேற வேண்டுமானால் ஆதி இந்தியாவின் சாதனங்களை அடியோடு பற்ற வேண்டும்.

148. வெளி விஷய மயக்கங்களை ஒழித்திருக்க வேண்டிய நமது பாரத நாட்டில் பகிரங்க மயக்க நாட்டார்கள் குடி புகுந்தது துடற்கால நாட்டம்.

149. உண்மையில் இந்தியா உள்ளவாறு க்ஷேமமடைய வேண்டுமானால் உறுதியான பகவத் காலக்ஷேப மயக்க ரகித ஆத்ம நாட்டமான நாடுதான் ஆய்விட வேண்டும்.

150. நமது இந்தியாவின் ஆதிகால முதல் இக்காலம் வரை உள்ள மஹான்கள், அவதார புருஷர்கள், சுத்த தீரர்கள், பதிவிரதைகள், தெய்வீக புருஷர்கள், மேதாவிகள், தெய்வங்கள் மற்றும் திரிமூர்த்திகள், தேவர்கள் இவர்களுடைய முழுப் பார்வையான அனுக்கிரகத்தால் இந்தியா சகல விதத்திலும் மேம்பாடடைய வேண்டுவதே நமது அந்தரங்கக் கடமை.

ஓம் தத் ஸத்

ஓம்
தத் ஸத்

# கடவுள் மதம்

இஃது
தென்னாற்காடு ஜில்லா
**கடவுள் மதக் கோஷ்டியார்களால்**

திருச்சினாப்பள்ளி
**ஜெகம் அண்டு கோ., டாட்ஸன் பிரஸில்**
பதிப்பிக்கப்பட்டது.

1923 பதிப்பின் மறு பதிப்பு

ஓம் தத் ஸத்

# கடவுள் மதம்

அத்வைத அபேத சாக்ஷலத்கார பரமாத்ம பரமேஸ்வர நிர்க்குண அந்தர்பூத லக்ஷியார்த்த அந்தரார்த்த அசல அந்தரங்க நிச்சல ஓங்கார சொரூப அப்ரமேய நிரதிசயானந்த அவாங்மனோவகோசர நிஷ்கள துரியாதீத பாரமார்த்திக பரிபூரண ஞானாதீத அபாவ சாக்ஷிப்பிரகாச ஜோதிஸ்வரூப மதாதீத சுகாலய பரப்பிரஹ்ம பராபர பராதீத பரவாசுதேவ பரமசிவ கேவல கூடஸ்த சநாதன சிதாகாச ஆத்மப் பிரகாச சூக்ஷும சுதந்தர அகில சமரஸ சன்மார்க்க வுபசாந்த வடிவக் கடவுள் மதம்.

ஓம் தத் ஸத்

# கடவுள் மதத்தின் அந்தரங்க அபேத அனுஷ்டானங்கள்

1. உலகத்திலுள்ள எல்லாவித லக்ஷணங்களுக்கும் அப்பாற்பட்ட திவ்ய லக்ஷணங்களோடுகூடிய தெய்வீகக் கொள்கைகளைப் பகிரங்கத்திற் காட்டக் கூடிய இந்தக் கடவுள் மதமானது, இருவரில்லாததும், என்றும் அழியாததும், ஏகாந்தமானதும், இறப்புப் பிறப்பு இல்லாத இடத்தில் நிலைபெற்றுள்ளதும், இன்பாதீத அச்சுதமாயும், ஏகாந்த அசல இடத்தில் பொருந்தியிருக்கப்பட்டது.

2. யதார்த்த காம்பீர்ய பரிசுத்த ஞானத்தை மட்டும் முடிவில் அங்கீகாரம் செய்வது.

3. கால தேச, வர்த்தமான பிரதிபந்த மனுஷ்ய வர்க்க மனாதி தத்துவ இந்திய போக ஸ்தூல அதிகாரங்களை நோக்கி நிஷ்காம நிரங்குச பக்தியோகம். பலரகிதவுபாசனா மந்திர

யோகம். சன்மார்க்க அபேதப் பிரஹ்ம ஞான கரும யோகம். பிராணமன இந்திரிய நிக்கிரக நிச்சல ராஜயோகம். ஸ்வாதந்தர்ய குண சுகுண அஷ்டாங்க அமல யோகம். சகுண நிர்க்குண மனோலய தியான யோகம். இவைகளை அவஸ்யமாய் ஏற்றுக் கொள்வது.

4. உலக வுபகார வடிவ ஞான கைங்கரியப் பிரவிருத்த போக யீஸ்வர ஆக்ஞாரூப. அவதார புருஷர்கள் தவிர ஏனையோர்கள் எவராயிருந்தாலும் முக்திக்குப் பெருந்தடை களாகிய சித்தி மார்க்கங்களில் பிரவேசியாதிருக்க வேண்டு மென்ற எண்ணங் கொண்டது.

5. கற்பனா சாஸ்திரங்களில் வெறுப்பை உடையது.

6. கடினமான ஜாதி பேதங்களையும் மத பேதங்களை யும் ஸ்தூல ஆசாரங்களையும் அடியோடு விட்டுவிட உறுதி கொண்டது.

7. ஈஸ்வரப் பிரதிநிதிகளாகிய மஹரிஷிகளால் ஆதியிலேற் படுத்தப்பட்டிருக்கிற வருணாச்சிரம தரும பேதங் களில் கால நோக்கி நம்பிக்கை யுடையதும் ஞான சாதன மானவை களாயிருந்தால் அனுஷ்டிக்கவும் கூடியது.

8. வந்து வந்து மாறுகிற சுபாவமுள்ள ஆனந்தத்தை விளைவிக்கக் கூடிய மார்க்கங்கள் எதுவோ அவைகளை யெல்லாம் அற்பமென்று விட்டுவிடுவது.

9. ஞானி அஞ்ஞானியென்ற பேதமின்றி தேச கால மத வித்தியாஸமின்றி யீஸ்வர சிருஷ்டிக்குள் அகப்பட்ட ஜீவர் களனைவருக்கும் யதார்த்தமானவைகளைப் புகட்ட வேண்டிய ஆற்றலுடையது.

10. தெய்வ வர்க்க மனுஷ்ய வர்க்கத்தார்களை அன்றியும் மிருகங்கள் பக்ஷிகள் நீர் வாழ்பவைகள் மரங்கள்

செடி கொடிகள் இவைகளுக்கும் உண்மை நிலைமையைப் போதிக்கக் கூடிய சக்தியை அடைய வேண்டிய அறிவைச் சொந்தமாகவுடையது.

11. மோக்ஷத்திற்கு பிரபல சாதனங்களாகிய ஸ்தூல ஷட்கோச தத்துவ வுடம்பையும் சூக்ஷ்ம சரீர கர்த்தாவும், ஞான ஸமஸ்கார மாதாவுமாகிய மனத்தையும், யாதொரு விதக் குறைவுமின்றித் தெய்வத்தைப் போல் பாவிக்க வேண்டிய உறுதியுள்ளது.

12. கலப்புள்ள எல்லா நூல்களையும் ஒரு மதச் சார்பான சாஸ்திரங்களையும் அஞ்ஞானிகளால் செய்திருக்கப்பட்ட நூற்களையும் நிராகரித்து விடுவது.

13. ஸ்தூல சரீரத்தையும் தசேந்திரியங்களையும் பிராண அபானன்களையும் மனத்தையும் மற்ற தத்துவங்களையும் வாட்டி ஹிம்சைப்படுத்தி அதனால் முக்தி சம்பாதிக்கும் அறிவீனக் கணத்தை விட்டொழித்தது.

14. ஜகதீஸ்வரன் பிரத்யக்ஷமாகிக் கூறிய போதிலும் வேத ஆகம புராண ஸ்மிருதி இதிகாசங்கள் பிரபலமாகப் புகன்றாலும் மஹத்துக்கள் ஆச்சாரியர்கள் புகன்ற போதிலும் நமது யுக்திக்குப் பொருத்த மில்லாது போகுமாயின் தள்ளிவிடக் கூடியது.

15. அனுபவம் மாத்திரம் பிரமாணமாக அந்தரங்கத்தி லுடையது.

16. ஆரம்பத்தில் பதி, பசு, பாசம் இம்மூன்றையும் முறையே ஒப்புக் கொள்வது.

17. ஜெனன மரண துக்கங்கள் ஒழிவதற்குச் சாதனமான தும் விபரீதமற்றதுமாகிய காரியங்கள் எதுவாயிருந்தாலும் விதிப்படி செய்வது.

*18.* உலகத்திலுள்ள சர்வ மதாந்தரங்களின் பிரபலமான அந்தரங்க பகிரங்க அனுஷ்டானங்கள் முழுமையும் மனதை ஏகாக்கிரப்படுத்துவதற்கு மாத்திரமென்ற உண்மையைக் கண்டு கொண்டது.

*19.* கடவுள் ஒருவரைத் தவிர மற்றத் தேவர்களுக்கும் ஆத்மா ஒன்றைத்தவிர மற்றத் தத்துவங்களுக்கும எவ்வளவு பேதமிருக்கிற தென்பதைச் சாஸ்திர மூலமும், சொல் மூலமும் நம்பாமல் தன்னுடைய அப்பியாஸ அனுபவத்தால் கண்டு கொள்ளப்படுகிற காருண்யங் கொண்டது.

*20.* அஞ்ஞானி தாழ்ந்த ஜாதி யென்றும், ஞானி உயர்ந்த ஜாதி யென்ற அறிவை யேற்றுக் கொள்வது.

*21.* ஸ்தூல சரீர ஆகார விஷயங்களில் வெகு விழிப்போடு கூடியது.

*22.* ஜீவ சுபாவத்தைக் கொண்டு ஜீவபேத ஜட பேத பிரபஞ்ச பேதங்களை ஏற்றுக் கொள்வது.

*23.* சொந்த ஆத்ம பக்தி, ஆசார்ய பக்தி, பரமாத்ம பக்தி ஸ்தூல சரீர பக்தி, மாதா பிதாக்களின் பக்தி, வேத வேதாந்த ஞான பக்தி, தான் ஜனித்த தேச பக்தி, பொதுவாக உலக பக்தி, இவைகளை முறையே முறைப்படி அனுஷ்டானத்திற்குக் கொண்டு வரக் கூடிய ஆற்றலுடையது.

*24.* அந்தரங்க சாதனைகளைப் பெருக்கி அதன் அனுஷ்டான அனுபவ பலத்தால் பகிரங்க சாதனங்களைச் சுருக்கவும விட்டுவிடவும் வழி பார்ப்பதை அங்கீகாரம் செய்வது.

*25.* பிரபஞ்சத்திலுள்ளதும் உதயமாயிருக்கப்பட்டது மாகிய ஒவ்வொரு மதங்களிலுமுள்ள ரகஸ்ய தத்துவங்களை

விசாரணை செய்து அதில் ஒரு சார்பற்றதும் யதார்த்தமானது மாகிய தத்துவங்களை மாத்திரம் ஏற்றுக் கொள்வது.

26. பாரமார்த்தீகவுண்மை, ததும்பபடியும் எவருக்கும் அற்பங்கூட வெறுப்புத் தோற்றாத வண்ணமும் கெம்பீரமு மாகிய வசனங்களை அதிசயமாகப் பேச வேண்டுமென்றதை ஒப்புக் கொள்வது.

27. இயற்கையில் நம்பிக்கையும் சேர்க்கையில் நம்பிக்கையில்லாததையுங் கொண்டது.

28. தூஷித்தவர்மீது வெறுப்புக் கொள்ளாமல் விருப்பைக் கொள்ளுதலும் பூசித்தவர்மீது விருப்புக் கொள்ளாமல் வெறுப்பைக் கொள்ளுதலும் அப்பியாஸ அனுபவ காலங்களில் உடையது.

29. ஜட வஸ்துக்களை ஆதாரமென்று நம்பி அதன் சாதன பலத்தால் பிரஹ்ம ஞானமடைய வேண்டுமென்ற அஞ்ஞான எண்ணங்களை விட்டொழித்தது.

30. பிரஜா விருத்திக்கு ஏதுவாகியதும் ஸ்தூல சரீரத்திலுள்ள தத்துவங்களெல்லாவற்றிலும் பிரகாசமுடையதும் ஞான வீர்ய சாதனமானதுமாகிய ரேதஸை வெளியேற்றிவிடக் கூடிய சேஷ்டையான பதார்த்தங்கள் எதெது உண்டோ அவைகளை யெல்லாம் அத்தியந்தம் நிராகரணம் செய்து விடுவது.

31. கடவுள் நம்மீது கருணை கொண்டு நமது இருவினைகளைக் கொண்டே மோக்ஷ ஞான சாதனமாக நமக்குக் கொடுத்திருக்கப்பட்ட உடம்பை யாதொரு விகாரமும் பின்னமும் எப்போதும் எந்தக் காரணங்களை முன்னிட்டும் செய்யக் கூடாதென்ற விசால நோக்கமுடையது.

32. பிரதி உபகாரம் பெறுகிற எந்தக் காரியமும் அனுபவமும் உண்மையும் அன்பும் அற்றவை என்பதை உறுதியாய் கண்டது.

33. மது மாம்ஸங்கள் சகலவித லாகிரி வஸ்துக்கள் மனதிற்கு மயக்கத்தையும் உடலுக்கு நோயையும் பலமின்மையையும் உற்பத்தி செய்யும் பதார்த்தங்கள் இவைகளைக் கண்டிப்பாய் விட்டுவிட வேண்டிய ஊக்கமுடையது.

ஞான விஷய ரகஸ்யங்களையும் பக்தியோக கர்மயோக ராஜயோக அந்தரார்த்தங்களையும் அதிநுட்பமான சாஸ்திரார்த்தங்களையும் மறைப்பின்றி ஜாதிமத நிறபேதமின்றி வஞ்சமின்றி பிரதிப் பிரயாஜனமொன்றையுங் கருதாமல் கெம்பீரமாகக் கூறுகிற சுபாவங் கொண்டது.

34. தாழ்ந்த வுலோகங்களை உயர்ந்த சொர்ணம் வெள்ளி இவைகளாக்குகிற ரஸவாத வித்தை ஜால வித்தை சங்கீத சாஹித்திய வித்தை வைத்திய ஜோதிட மாந்திரீக வித்தை இவைகள் மாறுஞ் சுபாவமுடையனவென்றும் மனத்திற்குட்பட்ட பிராந்தி வடிவங்களென்றும் சந்நியாசிகள் இவைகளை அடியோடு நீக்கியிருக்க வேண்டுமென்ற அறிவை யுடையது.

35. மூல வேதம் பிரஹ்ம சூத்ரம் ஸ்ரீ பகவத் கீதை உபநிஷத்துக்கள் முதலிய சாஸ்திரங்களுக்கு யாரார் எந்தவிதமான பாஷ்யஞ் செய்திருந்தபோதிலும் நாம் நமது பூரண அறிவுக்கு எட்டியபடி பாஷ்யஞ் செய்து கொள்வதே இயற்கை ஞானத்தை உணர்த்துமென்ற உண்மையைக் கண்டு கொண்டது.

36. எந்தத் தேவர்களும் வேத சாஸ்திரங்களும் மதங்களும் இடையிலுண்டாயிருக்குமானால் மற்றோர் காலத்தில் அழிந்து விடுமென்ற ஆதி காரணத்தை அறிந்து கொண்டது.

37. ஒவ்வொரு மதங்களிலுமுள்ள வெளிச் சின்னங்களை யும் வேஷங்களையும் விளையாட்டாகக் கருதி விட்டுவிட்டது.

38. ஆலயத்திற் சென்று ஆங்குள்ள யீஸ்வரப் பிரதிமைகள் என்று சொல்லக் கூடிய விக்கிரக வடிவ சகுண மூர்த்திகளை நமஸ்கரிக்கும்போதும், மஹத்தையுணர்ந்த மஹான்களை தெரிசிக்கும்போதும், மற்றை யாரையாகிலும் வந்தனம் செய்யும்போதும் அந்தக்கரணத்தில் ஐந்துவித எண்ணங்களை எண்ணி ஐந்துதரம் பகிரங்கமாகச் சாஷ்டாங்க மாக நமஸ்காரம் செய்ய வேண்டுமென்ற பரிபூரண தத்துவங் கொண்டது.

39. சித்த சுத்தியானவர்கள் பகிரங்கமான ஐந்துவித நமஸ்காரங்களை விட்டொழிந்து மனோ மாத்திர சங்கற்ப ரூபமாய்ப் பஞ்சவித நமஸ்காரங்களைச் செய்ய வேண்டுமென்ற கருத்தைக் கொண்டது.

40. ஞானமடைந்தவர்களைப்பற்றி யாதொருவித நிபந்தனைகளையும் கூறுவதற்கு இடமில்லையாதலால் அன்னோர்களைப்பற்றி யாதொரு விதப்பந்த நிலைமை களையுங் கூறாததென்பது உள்ளிற் கொண்டது.

41. உள்ளிலும் வெளியிலும் ஒரே வஸ்துவே இருப்ப தென்றும், பிராணன், தேஜஸ் இவைகளிலும் உட்புற சுபாவ முடைய தத்துவங்களுண்டென்றும் அவற்றைத் துவைதமாக்கா மல் அத்வைதமாக்கிவிட வேண்டிய ஆற்றலுடையது.

42. தினந்தோறும் சூர்யதேவன் உதயமான நான்காவது ஜாம முடிவிலிருந்து ஐந்தாவது ஜாம முடிவுக்குள்ளும், தினகரன் மறைந்த மூன்றாவது ஜா முடிவிலிருந்து நான்காவது ஜாம முடிவுக்குள்ளும் இதன் அப்பால் இருக்கப்பட்ட தெய்வீக வடிவ யீஸ்வர நாம உச்சாரண மஹா மந்திரங்களையும் பாசுர

சொரூப ஸ்துதிகளையும் மும்மூன்று தரம் பாராயணம் செய்து வருவதென்ற ஆக்ஞையைச் சிரமேற்றாங்குவது.

43. அவரவர்கள் சாவகாச சௌகரியத்துக்கேற்றவாறு சர்வ சமயங்களிலும் பாராயணஞ் செய்யலாமென்றதை ஒப்புக் கொண்டது.

44. தினம் இரண்டு தரம் பாராயணஞ் செய்யவேண்டும். அல்லது ஒரு தரமாவது அவஸ்யம் செய்தே தீரவேண்டுமென்ற உறுதியானது.

45. தெய்வீக ரக்ஷக அவதார புருஷ வடிவத்தைக் கூடிய சீக்கிரம் எதிர்பார்க்கும் கூர்மை கொண்டது.

46. பாராயணம் ஆரம்பிக்குமுன் பஞ்சாங்க ஸ்நானம், மந்திர ஸ்நானம் முதலிய எட்டுவித ஸ்நானங்களில் சௌகரியம் போல் எதையேனும் செய்து கொண்டு மதாசாரப்படி நெற்றியில் ஏதேனும் லக்ஷியமிட்டு கீழ் ஆசனமிட்டு உத்தரமுகமாக நிமிர்ந்து எண்பத்து நான்கு யோக ஆசனங்களில் ஏதேனும் மொன்றிலிருந்து கொண்டு மனத்தை வியாபார, உத்தியோக, விவசாய, குடும்ப முதலிய எவ்வித எண்ணங்களையும் மறந்து ஏகாக்கிர சித்தத்துடன் ஐந்துவித நமஸ்காரங்களையும் செய்து விட்டு ஒவ்வொரு மந்திரங்களையும் மூன்று தரம் பாராயணம் செய்ய வேண்டும்.

47. உன்னதமான அகண்ட நோக்கங்களை ஆதாரமாகக் கொண்டு ஸ்திரீ புருஷ பேதமின்றி அதிகாரமுடையவர்கள் யாராயிருந்தாலும், பாராயணம் செய்து வரலாம்.

48. கடவுள் மதத்தின் உண்மையாகிய இரகசிய தூதர்கள் ஆங்காங்கு உலாவி அப்பப்போது அவரவர் களுடைய அதிகாரங்களை நோக்கித் தனித் தூதரால் உபதேசிக்கப் பெறுவது சகசமாகும்.

சகல மதவாதிகளுடையவும், வேதங்களுடையவும் ஆசாரியர்களுடையவும் உயர்ந்த லக்ஷியார்த்தத்தை மட்டும் அங்கீகாரம் செய்து கொண்டு, மாறுகிற பகிரங்க சாதனங்களை வேண்டாமென்ற அந்தரங்க உறுதி கொண்டது.

ஓம் தத் ஸத்

# மஹா மந்திரங்கள்

1. ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா அர்ஜுனனுக்குக் குருக்ஷேத்திர பூமியில் ஸ்ரீ பகவத் கீதை பதினேழாவது அத்தியாயததில் ரகஸ்யமாக உபதேசித்ததாயும்,

சதுர் வேத சித்தாந்த ரகசிய வடிவமான காயத்ரி மஹா மந்திரத்தின் அந்தர்பூத லக்ஷியார்த்த வாக்கியமாயும்,

நான்கு வேத சாகைகளாகிய சர்வ வுபநிஷத்துக்களிலும், ஆரம்பத்திலும், முடிவிலும் பிரதிபாதிக்கப்படுவதாயும்,

பரமாத்மாவின் உண்மை வடிவத்தைக் காட்டக் கூடியதாயும்,

பரமஹம்ஸ சந்நியாசிகள் மாத்திரம் உச்சரிக்கக் கூடியதாயும்,

மனத்தை ஆத்மாவினிடத்தில் அதிசீக்கிரம் சேர்க்கக் கூடியதாயும்,

மனத்தை ஆத்மாவினிடத்தில் அதிசீக்கிரம் சேர்க்கக் கூடியதாயும்,

இன்னும் நாநாவித மஹத்துவங்கள் பொருந்திய சாக்ஷலத்கார மஹா வாக்கியம்

**ஓம் தத் ஸத்.**

2. ஸ்ரீ காசி க்ஷேத்திரத்தில் மரிக்கக் கூடிய சகல ஜீவப் பிராணிகளுக்கும் ஸ்ரீ விஸ்வேஸ்வரரும், விசாலாக்ஷியும் ஒருமித்து வலது காதில், உபதேசிக்கிற தெய்வீகமாயும்

சாம வேதத்தின் தாரகரகஸ்யோபநிஷத்தில் விஸ்தார மாகச சொல்லப்பட்டதாயும் வால்மீக மஹரிஷி, ஹனுமார் அறுநூற்றுநாற்பது வடநாட்டு தாஸர்கள் முதலியோர் ஜபித்து முக்தி பெற்றதாயும்

பிரம தேவன் ரகஸ்யமாக உச்சரித்துக் கொண்டிருப்ப தாயும்,

சித்திகளை விரைவில் அளிக்கக் கூடியதாயுமுள்ள பாரமார்த்தீக பாராபர சொரூப

**தாரகப் பிரம்ம மந்திரம்**

**ஸ்ரீராம ராம ராமேதி – ரமே ராமே மனோரமே**
**சகஸ்துர நாம தத்ஸுல்யம் ராம நாம வராநநே.**

3. சதுர்வேதங்களின் ஒவ்வொரு ஸ்லோகங்களின் முடிவில் விளங்குவதாயும், பரவாசுதேவ பரப்பிரஹ்ம ஸ்வரூபப் பிரகாசதாரணையாயும், வித்தையாரம்ப விகசித மாயும், கத்திரபந்து என்ற பெரிய பக்தருக்கு அப்பிராகிருத வைகுண்ட மளித்ததாயும், கெம்பீரமும் பொருந்திய,

**திரீ அக்ஷரம்**

**ஹரி: ஓம்**

4. வேதங்களிலும், சிவாகமங்களிலும், சிற்சில புராணங் களிலும் அந்தரங்கமாகக் கூறியதாயும், பஸ்மஜாபாலோ பநிஷத்தில் பதமாகக் கூறப்பட்டிருப்பதாயும்,

அநேக மஹரிஷிகளும், சைவ சமயாசாரியார் நால்வரும், அறுபத்து மூன்று நாயன்மார்களும் சதா ஜெபித்து மஹா கைலாஸம் பெற்றதாயும்,

நந்தி தேவரது உறைவிடமாயும் மஹா பெருமையும் வாய்ந்துள்ள

## ஸ்தூல பஞ்சாக்ஷரம்

## ஓம் நமசிவய

5. ஸ்தூல பஞ்சாரத்தைக் காட்டிலும் ஒரு மாத்திரை உயர்ந்ததாயும் ஆறாதார சோடசகலாத் தியானத்தின் பூரண் மந்திரமாயும் சகலாகமத்தில் விவரமாகக் கூறப்படுவதாயும் ஜீவர்களின் ஆணவ மலத்தைப் போக்கக் கூடியதாயும் மற்றும் பல கீர்த்தி வாய்ந்துள்ள

## சூக்ஷும பஞ்சாக்ஷரம்

## ஓம் சிவயநம

6. ஸ்ரீ சுப்ரமண்ய கடவுளின் வடிவ லக்ஷணத்தைக் காட்டக் கூடியதாயும் வெகு சீக்கிரத்தில் அஷ்டமாசித்தியைக் காட்டக் கூடியதாயும் பிரம தேவனுக்கு முருகக் கடவுள் உபதேசித்ததாயும் அதிதீர அசல வடிவமும் பொருந்திய

## சடாக்ஷரம்

## ஓம் சரஹணபவ

7. யஜுஸ் வேதத்தின் நாராயண வுபநிஷத்டதில் அதிகாரத்தோடு கூறுவதாயும் அநேக மஹரிஷிகளும் பக்தர்களும் ஜெபித்ததாயும் பிரகலாதன் பன்னிரண்டு

ஆழ்வாராதியர்கள் அபர குசேலர் எழுபத்துநான்கு சிம்ஹாசன ஆசார்யர்கள் முதலியவர்கள் உச்சரித்ததாயும் பரம பதத்தை எளிதில் தரக்கூடியதாயும் க்ஷீராப்தி எம்பெருமானது திவ்ய ஞான லக்ஷணங்களைக் காட்டக் கூடியதாயும் ஸ்ரீராமானுஜாசாரியார் பகிரங்கமாகப் பாரத நாட்டு ஜனங்களுக்கு உபதேசித்த தாயும், பல மஹத்துவங்க்ள் வாய்ந்துள்ள

## அஷ்டாக்ஷரம்

## ஓம் நமோ நாராயணாயா

8. துவாதச ரகஸ்யோபநிஷத்தில் சாமவேதத்தில் விஸ்தாரமாகக் கூறப்படுவதாயும் துருவ பாலகனுக்கு நாரதர் உபதேசித்ததாயும் அமரேசன் அருந்ததீ கணவரிடம் அந்தரங்க மாக உபதேசம் பெற்றதாகியும் பலமான்மியம் பொருந்திய

## துவாதசாக்ஷரம்

## ஓம் நமோ பகவதே வாசுதேவாய

9. கலி புருஷனது ஆர்ப்பாட்டங்களும் செய்கைகளும் தாக்காதவாறு, நாரதர் முதலிய மஹரிஷிகளுக்குப் பிரமதேவர் உபதேசம் செய்ததாயும் சாம வேதத்தின் கலிசந்தாரண வுபநிஷத்தில் விபரமாகக் கூறியுருப்பதாயும் சர்வேஸ்வரனது அவதார லக்ஷணங்களை விளக்கிக் காட்டுவதாயும் பல மகிமை பெற்றுள்ள

## கலி சந்தாரண மந்திரம்

**ஹரே ராம ஹரே ராம**
**ராம ராம ஹரே ஹரே**
**ஹரே கிருஷ்ண ஹரே கிருஷ்ண**
**கிருஷ்ண கிருஷ்ண ஹரே ஹரே**

10. பரமார்த்த யதார்த்த பிராமணர்களுக்குச் சொந்த மானதாயும் சூரிய நாராயண தேவனது சுத்த நிலைமையைக் காட்டக் கூடியதாயும் சதுர்வேத ரகஸ்யமாயும் சாந்தியை விரைவில் பெறச் செய்வதாயும் மஹா ரகஸ்ய வடிவம் பொருந்திய

## காயத்திரி மஹா மந்திரம்

**ஓம். பூர். புவஸ். ஸ்வ:.**
**ஓம். தத். ஸத்.**
**ஓம். விதுர்வரேண்யம்**
**ஓம். பர்கோ தேவஸ்ய தீமஹி**
**ஓம். தீயோயோநப்பிர சோதயாது**

11. ஸ்ரீ கிருஷ்ண பகவான் காண்டீபனுக்குக் குரு க்ஷேத்திர புண்ணிய புமியில் உபதேசித்த ஸ்ரீ பகவத் கீதையின் கடைசி உபதேசமாகியும்

பகவத் கீதா சாரசங்கிரகமாகியும்

பரம ஏகாந்த பக்தியும் அதி சீக்கிரத்தில் தருவனவாயும்

வைஷ்ணவ மத ஆசார்ய உபதேச பஞ்ச சமஸ்காரங்களில் ஒன்றாகியும்

சுவாதந்தரியமுமுள்ள

ஸ்ரீ பகவத் கீதா சரம ஸ்லோகம்

**சர்வதர்மான் பரித்யஜ்ய மாமேகம் சரணம் விரஜ:**
**அஹம்த்வா சர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மாசுச:**

*12. ஸ்ரீ கண்ணபிரான் கிரீடிக்குக் கீதா வுபதேச மத்தியில் நாலாவது அத்தியாயத்தில் சத்தியமாகக் கூறிய வாக்கியமாயும்,*

*பாரத நாட்டுக் காவலனான தன்மை பெற்றதாயும்*

*சர்வலோக சரண்யத்துவத்தைக் காட்டக்கூடியதாயும்*

*எல்லா வுலகங்களுக்கும் ஏற்றதாயும்*

*சநாதன தர்ம ஸ்தாபனத்தின் நித்தியத்தை அறிவிக்கக் கூடியதாயும்*

*இன்னும் பல உண்மை பெற்றுள்ள*

## சாஸ்வத சாக்ஷி வாக்கியம்

**பரித்ராணாய சாதூநாம்; விநாசாய சதுஷ்க்கருதாம்**
**தர்மசமஸ்தா பனார்த்தாய சம்பவாமி யுகே யுகே.**

## சகுணத் தியான ஸ்லோகம்

**வனமாலி கதீசார்ங்கீ சங்கீசக்ரீ சனந்தகீ**
**ஸ்ரீமாந் நாராயணோர் விஷ்ணுர் வாசு தேவோபி ரக்ஷது.**

## ஆசார்ய வாக்கியம்

**ஸ்ரீசைலேச தயாபாத்ரம் – தீபக்தியாதி குணார்ணவம்**
**யதீந்த்ரப் பிரணவம் வந்தே – ரம்யஜா மாதரம் முநிம்**
**லக்ஷுமீநாத சமாரம்பாம் – நாதயாமுனமத்யமாம்**
**அஸ்மதாசார்யபர்யந்தாம் வந்தே குருபரம்பராம்.**

*ஓம் தத் ஸத்*

*இப்படிக்கு*
**ஸ்ரீ விலக்ஷணானந்த ஸ்வாமிஜி**



ஸ்ரீ விலக்ஷணானந்தர்

யோக நித்திரையில் திறமை காட்டும் நிலை